

பயணம்: 2 பதிவு: 4

"ஹெரிட்டேஜர்" தமிழ் இதழினை, தமிழக மரபுசார் ஆர்வலர்கள் சார்பாக, மின்னிதழாக வெளியிடுவோர், இராஜசேகர் பாண்டுரங்கன்.

இந்த இதழின் நோக்கம், மரபு சார்ந்த செய்திகளைப் பகிர்தல் மட்டுமே. மற்ற எவ்வித ஆதாய நோக்கமும் இல்லை.

ஹெரிட்டேஜர் தமிழ் இதழ்,
தமிழக மரபுசார் ஆர்வலர்கள் சங்கம்,
26, முதல் தெரு, ராமலிங்கா நகர்,
நெற்குன்றம்,
சென்னை. 600107
தொலைப்பேசி: 9786068908

கட்டுரைகளை அனுப்ப:
news@heritager.org

முந்தய இதழ்கள்: goo.gl/AeBzaa

Telegram











*அட்டைப்படம்:*
*பிச்சை தேவர்*



TAP HERE TO DOWNLOAD FOR
Android



## Donate

கோவை இதழ் சிறப்பாக வர உதவிய தமிழக மரபுசார் ஆர்வலர்கள் குழுவினரும், அதன் ஒருங்கிணைப்பாளருமான தம்பி. பெருவாகைக் கொண்டான் விஜய்குமாருக்கும், வழிநடத்திய கோவை அரசு அருங்காட்சியகம் மற்றும் தொல்லியல் அருங்காட்சியக பொறுப்பாளர்களுக்கும், கோவை அரசுக் கல்லூரி துறைத்தலைவர் பேராசிரியர் கானப்பிரிய அவர்கள், ஆசிரியர்கள் மற்றும் மாணவர்கள் அனைவருக்கும் நன்றியும் வாழ்த்துக்களும்.

Paytm
Accepted Here

Heritager Magazine

To Pay,
Scan QR code in Paytm App



India's Most Sincere Bank
Paytm Payments Bank

Paytm QR code issued by One97 communication PVT. Ltd

PhonePe

ACCEPTED HERE

Scan & Pay Using PhonePe App



or Pay to Mobile Number using PhonePe App
9786068908






UPI ID: 9786068908@ybl



# ஜவுளி அருங்காட்சியகம்

## வித்யா லட்சுமி

உலகின் மிகப் பழமையான நூற்பு இயந்திரம்

கோயம்புத்தூர் மாவட்டத்தின் எல்லைகளாக வடக்கே நீலகிரி மாவட்டமும், தெற்கே திண்டுக்கல் மாவட்டமும், கிழக்கே திருப்பூர் மாவட்டமும், மேற்கே கேரள மாநிலமும் அமைந்துள்ளது.

மேலும் கோவையைச் சுற்றி ரத்தினகிரிமலை, பாலமலை, குருடிமலை, மருதமலை, வெள்ளிங்கிரி மலை, அய்யாசாமி மலை ஆகியன உள்ளன. அதுமட்டுமின்றி திருமூர்த்தி அணை, ஆழியாறு அணை, பவானிசாகர் அணை போன்ற அணைகள் காணப்படுகின்றன. குறிப்பாக, "நொய்யல் ஆறு" கோவை மாவட்டத்திற்கு பெருமை சேர்க்கிறது.

இங்கு பருவ நிலையானது மாசி, பங்குனி, சித்திரை மாதங்களில் ஓரளவு குளிராக காணப்படுகிறது. மேற்குத் தொடர்ச்சி மலையில் இருந்து சற்று தொலைவில் பாலக்காடு கணவாய் அமைந்துள்ளது. இந்த கணவாய் வழியாக காற்று கிழக்கே செல்வதால் பருவ மழையும் இதமான காற்றும் இந்நகருக்கு கிடைக்கிறது. முக்கியமாக எங்கும் பசுமை நிறைந்த மலையும், மூலிகை தாவரங்களும் அதிகம் இருப்பதால் சுவாசத்திற்கு தேவையான தூய்மையான காற்று கிடைக்கிறது. தென்மேற்கு பருவக்காற்று ஜுன் மாதம் முதல் ஆகஸ்ட் மாதம் வரையும், வடகிழக்கு பருவக்காற்று அக்டோபர், நவம்பர் மாதங்களில் வீசும். இம்மாதங்களில் நல்ல மழையும் இங்கு காணப்படுகிறது. அதன்பிறகு டிசம்பர், ஜனவரி மாதங்கள் குளிர்காலங்களாகும். இது வண்டல்மண், கரிசல்மண், செம்மண் போன்றவற்றால் ஆன நில அமைப்பாகும். கோயமுத்தூர் பீடபூமி பகுதியில் அமைந்திருக்கிறது. விவசாய நிலங்களுக்கு தேவையான அனைத்து வளங்களையும் பெற்றிருக்கிறது. இத்தகைய நில அமைப்பால் நெல், கரும்பு, கோதுமை, பருத்தி, சோளம் போன்றவை செழிப்புடன் வளர்கின்றது.

தமிழகத்தின் முக்கிய மாவட்டங்களில் ஒன்று கோவையாகும். எங்கும் பசுமை, அடர்த்தி நிறைந்த மரங்கள், மிதமான தட்பவெப்ப நிலை, இயற்கை எழில்மிகும் இடங்கள், தொழிலுக்கு பெயர்போன இடங்கள் இப்படி எண்ணற்ற சிறப்புகளை கொண்டு விளங்குகிறது. முதலில் பேரூரை தலைநகராக கொண்டு விளங்கியுள்ளது. கோவை மாவட்டத்தின் சிறப்புகள் எத்தனையோ இருக்க அவற்றில் முக்கிய வளர்ச்சியாக்க் குறிப்பிடுவது "இயந்திர தொழிலாகும்". தமிழகத்தின் முக்கியத் தொழில் வளர்ச்சி கழகமான "சிட்கோ" இங்குதான் அமைந்துள்ளது. இங்கு அதிகமான தொழிற்சாலைகள் உள்ளதால் பல லட்சம் பேருக்கு வேலை வாய்ப்பை அளிக்கிறது. இவ்வளவு



சிறப்பு வாய்ந்த கோவை தமிழகத்தின் தென்மேற்கு திசையில் அமைந்துள்ளது.

பூமியில் 10 டிகிரி கிழக்காகவும் 11 டிகிரி வடதிசை நோக்கியம் அமைந்துள்ளது. ஒரு வருடத்திற்கு 25 சென்டி மீட்டர் மழைப்பொழிவை தருகிறது. கோவை நகரம் 200 ஆண்டுகளுக்கு முன் ஒரு கோயில், சிறு கோட்டை, அதைச் சுற்றி நான்கு அல்லது ஐந்து வீதிகள், சில சந்துகள் என ஏக்கர் பரப்பளவில் அமைந்திருந்தது.

இன்றைய கோவை நகரத்தில் பல்வேறு மத, இன, மொழி பேசும் மக்கள் ஒன்றாக வசித்து வருகின்றனர். இவர்களில் அதிகமாக தெலுங்கு பேசும் சமூகத்தினர் உள்ளனர். அடுத்ததாக பிராமணர்கள், வாணியர்கள், ஆரிய வைசியர், முகமதியர், கிறிஸ்துவர் முதலானோர் உள்ளனர். ஒக்கிலியர், குரும்பர், குயவர், இடையர், ஒட்டர், வண்ணார், நாவிதர் இனத்தைச் சேர்ந்தவர்களும் அடங்குவர்.

இப்படி எண்ணற்ற பல சமூகத்தினர் வாழ்ந்தாலும் அவர்களுக்குள் சகோதரத்துவமும், தேசப்பற்றும், அன்பும் நிலவு வருகிறது.

கஸ்தூரி சீனிவாசன் ஜவுளி அருங்காட்சியகம்

கஸ்தூரிரங்கன் அறக்கட்டளை மூலமாக திரு. கஸ்தூரி சீனிவாசன் மற்றும் அவரது துணைவியார் திருமதி.பார்பரா அவர்களின் கனவான ஜவுளி அருங்காட்சியகம் தொடங்கப்பட்டது.

அருங்காட்சியகத்தை பற்றி அதன் மேலாளர். திரு. குப்புராஜா கூறுகையில், "கஸ்தூரி சீனிவாசன் அவர்கள் 12, மே 1917-ஆம் ஆண்டு பிறந்தவர் இயற்பியலில் இளங்கலை பட்டம் பெற்றவர் தம் முதுகலை படிப்பை ஜவுளி தொழில்நுட்பத் துறையில் இங்கிலாந்தில் முடித்தார். இந்தியா திரும்பிய அவர்களின் குடும்பத் தொழிலான ஜவுளி நூற்பாலையில் பணியாற்றினார். சில வருடங்களில் தென்னிந்திய ஜவுளி ஆராய்ச்சி கூட்டமைப்பைத் தொடங்கினார். கல்வி நிறுவனங்களைத் தொடங்கிய அவர், ஜவுளித் துறையிலும் ஆராய்ச்சி செய்வதில் கவனம் செலுத்தினார். 1991-ம் ஆண்டுக் கோயம்புத்தூர் புற்றுநோய் அறக்கட்டளையை நிறுவினார். சிறந்த நூலாசிரியராகவும் திகழ்ந்த அவர் 25க்கும் மேற்பட்ட புத்தகங்களை எழுதியுள்ளார். 1969-ம் ஆண்டு இந்தியாவின் உயர்ந்த விருதான பத்மபூஷன் விருது அவருக்கு வழங்கப்பட்டது.

அவரின் மனைவி திருமதி. பார்பரா சீனிவாசன் சிறந்த நீர் வண்ண (water colour) ஓவியராகத் திகழ்ந்தார். திருமணத்திற்குப் பிறகு இங்கிலாந்தில் உள்ள பல அருங்காட்சியகங்களுக்குச் சேர்ந்து பயணித்த இருவருக்கும் கோவையிலும் அருங்காட்சியகங்கள் அமைக்கும் ஆவல் ஏற்பட்டது. அருங்காட்சியக அமைப்புமுறையை இங்கிலாந்து அருங்காட்சியகங்களிலிருந்து அறிந்துகொண்டனர்.







இந்த அருங்காட்சியகம், இந்தியாவின் ஜவுளி வளர்ச்சி வரலாற்றைப் பற்றிய பல சான்றுகளைக் கொண்டுள்ளது. கலை நிகழ்ச்சிகளுக்காக, ஒரு பெரிய அரங்கை நிறுவியுள்ளனர். பல ஆராய்ச்சி நூல்களைக் கொண்ட நூலகம் ஒன்றும் அமைத்துள்ளனர். இந்த அருங்காட்சியகத்தில் ஜவுளித் துறையின் வளர்ச்சி, அதற்காகப் பயன்படுத்தப்பட்ட இயந்திரங்களின் மாதிரிகள், சக்கரங்கள், தரிகள், பின்னலாடை தரிகள் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன.

எகிப்து தக்ளி, மொகஞ்சதாரோ நூற்பாலை, ஜவுளிகள் பற்றிய ஆராய்ச்சிகளின் வரைபடங்கள், மாதிரிகள், தொழிற்புரட்சி காலத்தில் பயன்படுத்தப்பட்ட இயந்திரங்கள் மற்றும் அதனுடைய மாதிரிகள் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன. நைஜீரியா குகையில் கிடைத்த ஆயிரம் வருடம் பழமையான ஆடை ஒன்றும் காணக்கிடைக்கிறது. பலவிதமான நூல் வகைகள் வகைப்படுத்தப்பட்டுள்ளன. பாரம்பரியம் மிக்கப் புடவைகள், ஆடைகள், கலைப்பொருட்கள், இந்தியாவில் பயன்படுத்தப்படும் ஆடை அணிகலன்கள் காணப்படுகின்றன.

புதுவிதமான பயன்பாட்டிற்கு வந்துள்ள் வாழையிலிருந்து தயாரிக்கப்பட்ட இழைகள், அன்னாசியிலிருந்து தயாரிக்கப்பட்ட இழைகள், பழங்கால ஓவியங்கள், கோவில்களிலுள்ள சிற்பங்களில் வடிவமைக்கப்பட்ட உடைகளின் புகைப்படங்கள் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன.

உலகிலேயே மிகப்பழமையான நூர்ப்பு இந்த இங்குதான் உள்ளது என்றும் ஜவுளி தொழில் நுட்பம் பற்றி உலகில் உள்ள அனைத்து மாணவர்களும் வந்து பார்க்கும் இந்த அருங்காட்சியகம், ஓர் அரிய தகவல்களின் களஞ்சியமாக மட்டுமல்லாது ஜவுளிகளின் வளர்ச்சியில் இந்தியா கொண்டுள்ள பங்கை நாம் அறிந்து பெருமைகொள்ள வேண்டும் என்பதற்காகவும் உருவாக்கப்பட்டுள்ளது.



# தென் கயிலாயம் மலையேற்றம் – வேலுதரண்



கொங்கு மண்டலத்தின் கோயமுத்தூர் அருகே மேற்கு மலைத் தொடரின் ஒரு பகுதிதான் இக்கட்டுரையில் நாம் காணப்போகும் தென் கயிலாயம் எனப்படும் வெள்ளியங்கிரி மலை. மலையேற்றப் பிரியர்களுக்கு மிகவும் பிடித்தமான ஒரு மலை. ஒவ்வொரு வருடமும் புது புது சவால்களையும்... அனுபவங்களையும் கற்றுக் கொடுக்கும் ஒரு மலை. ஏழு மலைகளையும் தாண்டி இயற்கையாகப் பல்லாண்டு காலமாக உருவான குகையில் தாய்பாறையுடன் சார்ந்த சிவலிங்கங்கள்.

அச்சிவலிங்கங்களைத் தரிசிக்கக் கோடைக்காலத்தில் மட்டுமே படையெடுக்கும் பக்தர்கள்.. கேரள மாநிலத்தின் எல்லையில் அமைந்த சிறுவாணி அணையின் எழில் தோற்றம்... இரு மலைகளில் ஊடே நமக்கு கீழே தவழ்ந்து செல்லும் மேகங்கள்.. அடிவாரத்தில் இருந்து ஏழாவது மலையின் உச்சிவரை நிலவும் இரு வேறு சீதோஷ்ண நிலைகள்... மூலிகைச் செடிகளுடன் கூடிய இயற்கை எழில் கொஞ்சும் வனம், கோடையிலும் வற்றாத சுனை.. பணச் செலவில்லாமல் நமது உடலைப் பரிசோதனை செய்து கொள்வது.. இது போன்ற பல அதிசயங்களைக் கொண்டது தான் இம்மலை. ஒருமுறை சென்றவர்களை மீண்டும்.. மீண்டும் ஏறத்தூண்டும் வெள்ளியங்கிரி எனும் இம்மலை..

நான் கோவையில் கல்லூரியில் படித்தபோது 1974ஆம் ஆண்டு முதல் முறையாகச் சென்றது. இடையில் மிக நீண்ட வருட இடைவெளிக்குப் பிறகு 2011 ஆம் ஆண்டுதான் செல்ல முடிந்தது. அது புதுமையான அனுபவம். பகல் வேளையில் இயற்கையை ரசித்துக்கொண்டே ஒரு அசட்டுத் தைரியத்தில் தன்னந்தனியாகச் சென்றது. பாதுகாப்பாகச் சென்று வந்தது இறைவனின் அருளே. இந்த வருட மலையேற்றம் கடந்த மார்ச் மாதம் 15ந் தேதி சில நண்பர்களுடன் நடு இரவு அடிவார கோயிலிலிருந்து கிளம்ப ஏற்பாடு ஆகியது. கோயில் நிர்வாகத்தால் விற்கப்படும் மூங்கில் குச்சிகளை (ரூபாய் 30) வாங்கிக் கொண்டு வன அலுவலர்களின் சோதனைக்குப் பிறகு கிளம்பினோம். இரவு எங்கும் அதிக நேரம் தங்கவில்லை. நாங்கள் கணக்கிட்டக் காலத்தைவிடச் சுமார் ஒரு மணிநேரம் கால தாமதமாகவே 7வது மலையை அடைய முடிந்தது. சூரிய உதயத்தை 7வது மலை மீது காண முடியாவிட்டாலும் அதன் பாதி வழியிலேயே காண முடிந்தது.

தரிசனத்திற்குப் பிறகு வட்டப்பாறையில் அமர்ந்து காலை உணவை முடித்துக் கொண்டு கீழே இறங்க ஆரம்பித்தோம். வெய்யில் ஏறுவதற்கு முன்பே நான்காவது மலையை அடைந்து விட வேண்டும் என்ற குறிக்கோளுடன். (நான்காவது மலையிலிருந்து



ஏழாவது மலை வரை பாதையில் நிழல் தரும் மரங்கள் எதுவும் கிடையாது.. வானமே கூரையாக கறுப்பு மண்ணின் சூடு, இரவு உறங்காமையின் அசதி, பக்தர்கள் நடந்ததால் ஏற்பட்ட மிருதுவான மண்ணின் சறுக்கல், கால்களில் ஏற்பட்ட சோர்வு, (ஏற்கனவே காலில் முறிவு ஏற்பட்டு ஏழு ஆணிகளுடன் பிலேட் வைக்கப்பட்டு இரும்பு மனிதனாக நடமாடுபவன்) முதலியவை எங்கள் குறிக்கோளை மிகவும் தாமதப்படுத்தியது. ஐந்தாவது மலையிலும், வெள்ளை பிள்ளையார் கோயில் மண்டபத்திலும் இரண்டு மணி நேரத்திற்கு மேல் உறங்கிவிட்டு அடிவார கோயிலை அடையும்போது மணி சுமார் நான்கு. இறைவனுக்கு நன்றி கூறிவிட்டு அடுத்தநாள் கரிக்கையூர் பாறை ஓவியம் காண ஆயத்தம் செய்யக் கிளம்பி விட்டேன்..

இக்கட்டுரையைப் படித்துவிட்டு செல்ல விரும்பும் அன்பர்களுக்குப் பயன்படும் குறிப்புகள் சிலவற்றை இங்குத் தந்துள்ளேன். பயன் உள்ளதாக இருக்கும் என நம்புகின்றேன்.

மகாசிவராத்திரியில் இருந்து மே மாதம் 31ந்தேதி வரை மட்டுமே வன அதிகாரிகளால் இரவும் பகலும் பக்தர்கள் மலை ஏற இறங்க அனுமதிக்கப்படுகின்றனர். ஜூன் மாதம் ஒன்றாம் தேதியில் இருந்து கோவை பகுதிகளில் மழைக்காலம் ஆரம்பித்து விடுவதால் மே மாதத்திற்குப் பிறகு மலை ஏறாமல் இருப்பது நல்லது. மழையில் வழுக்கும் என்பதாலும், மிருகங்கள் நடமாட்டம் ஆரம்பித்து விடுவதாலும் அனுமதிக்கப்படுவது இல்லை. ஆனாலும் அமாவாசை நாட்களில் காலையில் ஏறி மாலையே திரும்பி விட அறிவுறுத்தப்படுகின்றனர். கடந்த ஆண்டிலிருந்து எல்லா வயது பெண்களும், திருநங்கைகளும் அனுமதிக்கப்படுகின்றனர் என்பது ஒரு கூடுதல் தகவல். நாங்கள் இறங்கி வரும் போது மூன்று இளம் பெண்களும், சிறுமியரும் ஏறுவதைக் கவனித்தோம் இதையே கோயில் நிர்வாக அலுவலகத்திலும் உறுதி செய்து கொண்டோம்.

மலையேற்றத்தின்போது கடைப்பிடிக்க வேண்டியவை. சுமார் இரண்டு லிட்டர் தண்ணீர், குலுகோஸ் பாக்கட், பழம், பிஸ்கட், ஆரஞ்சு மிட்டாய் போன்றவற்றை எடுத்துச் செல்வது நலம்.










சாதாரண மனிதர்களுக்கே 8 முதல் 10 மணி நேரம் வரை மேலே ஏறி இறங்க ஆகும் என்பதால் ஒரு வேளை உணவாவது எடுத்துச்செல்வது நல்லது. இது தவிர மலையேற்ற வழியில் சுமார் 20 கடைகள் உள்ளன. சோடா, தண்ணீர் வெள்ளரிக்காய், தர்பூசிணி பழம், மாங்காய், நொறுக்குத் தீனிகள், கம்பங்கூழ், மூலிகை தேநீர் போன்றவையும் கிடைக்கின்றன.
டார்ச் லைட், மூங்கில் கம்பு (கோயில் நிர்வாகத்தின் சார்பில் விற்கப்படுகின்றன ரூபாய் 30 விலையில்) எடுத்துச் செல்வது மலையேற்றத்தை இலகுவாக்கும்.
நான்காவது மலை முடிந்து ஏழாவது மலை வரை, கேரள மலைகளிலிருந்து மிக்கக் குளிர்ந்த காற்று வீசும். ஆதலால், போர்வை, சால்வை அல்லது ஸ்வெட்டர் போன்றவை எடுத்துச் செல்வது நலம்.
மலையேற்றத்தின்போது தவிர்க்க வேண்டியவை.
நெகிழி எந்த வடிவத்திலேயும், தண்ணீர் பாட்டில் லேபில் உட்பட எடுத்துச் செல்லாமல் இருப்பது நன்று. வன அதிகாரிகளும் இதைத்தான் முக்கியமாகச் சோதனை இடுகின்றனர்.

தீப்பெட்டி கண்டிப்பாக எடுத்துச் செல்லக்கூடாது.
தேவையற்ற பொருட்களை ஒரு பையில் இட்டுப் பாதுகாப்பு அறையில் வைத்துச் செல்லலாம் (ஒரு நாள் வாடகை ரூபாய் 20 மட்டும்). கேமரா எடுத்துச்செல்ல அனுமதிக்கப்படுவது இல்லை. ஆதலால் பாதுகாப்பு அறையில் தான் வைத்துச் செல்லவேண்டும் அல்லது எடுத்துச் செல்லாமல் இருப்பதே நலம்.



உலக இனத்தின் வரலாறு என்பது சமகாலத்தில் அந்த இனம் பதிவுச் செய்யும் படைப்புகளின் மூலமே சேமிக்கப்படுகிறது என்பது மறுக்க முடியாத உண்மை. 19ஆம் நூற்றாண்டின் பிற்பகுதி வரையில் பாடல் வடிவில் நிலைபெற்றிருந்த தமிழ்ப் படைப்பிலக்கியத்தைத் தனது பிரதாப முதலியார் சரித்திரம் மூலம் புதினமாக்கி (நாவல்) கைப்பிடித்து அழைத்து வந்தவர் மாயூரம் சாமுவேல் வேதநாயகம் பிள்ளை ஆவார்.

1857 ல் எழுதப்பட்ட இந்தப் புதினமானது 1879 ஆம் ஆண்டுப் பிரசுரமாகித் தமிழில் புதினக் கணக்கைத் துவக்கி வைக்கின்றது (இதில் ஒரு சர்ச்சையும் உண்டு. அந்தியூர் அவதானி சரிதம் எனும் செய்யுள் வடிவப் புதினத்தைக் கணக்கில் கொள்ள வேண்டாம்). அதனைத் தொடர்ந்து ராஜம் அய்யர் எழுதிய கமலாம்பாள் சரித்திரமும் (1896), மாதவைய்யா எழுதிய பத்மாவதி சரித்திரமும் (1898) தமிழ்ப் புதின வரலாற்றைத் தொடர்ந்து நடைபழக்கியவைகள். ஆண்கள் மட்டுமே புழங்கிவந்த துவக்ககாலப் புதினப் படைப்புலகில், 1925 ஆம் ஆண்டு வைதேகி என்கிற புதினத்தின் வழியாக முதல் பெண் படைப்பாளியாகத் தன்னை அடையாளப்படுத்திக் கொண்டவர் வை.மு. கோதைநாயகி அம்மாள். இவரைத் தொடர்ந்து 1929—ல் தாருல் இஸ்லாம் என்கிற இஸ்லாமிய இதழில் எழுத ஆரம்பித்த சித்தி ஜுனைதா பேகம் குறிப்பிடத்தக்க தமிழின் முக்கியப் பெண் படைப்பாளி ஆவார். அவரது முதல் நாவலான காதலா கடமையா 1938ஆம் ஆண்டில் வெளிவந்துள்ளது.

1901-ம் ஆண்டு, டிசம்பர் 1 ஆம் நாள் காவல்துறையில் பணிபுரிந்து வந்த நீர்வளூர். என்.எஸ். வேங்கடாச்சாரியார் - பட்டம்மாள் தம்பதியருக்கு இரண்டாவது பெண்மகவாகச் சென்னையிலுள்ள திருவல்லிக்கேணியில் பிறந்தவர் வைத்தமாநிதி முடும்பை கோதைநாயகி அம்மாள். அவரது ஐந்தரை வயதில் 1907 ஆம் ஆண்டு அதே திருவல்லிக்கேணியில் பெரும் செல்வாக்குடனும், கல்வியுடனும் வசித்துவந்த வை.மு. சீனிவாச அய்யங்காரின் மூன்றாவது மகனான ஒன்பது வயது வை.மு. பார்த்தசாரதிக்குப் பால்ய விவாகம் செய்து கொடுக்கப்பட்டார். முறையாகக் கல்விப் பயிலாத வை.மு. கோதைநாயகி அம்மையார், சிறு வயது முதலே கற்பனையாகச் சிறுசிறுக் கதைகளைத் தனது குடும்பத்தினருக்கும், சகத் தோழிகளுக்கும் கூறும் பழக்கத்தைக் கொண்டிருந்தார். அவர் தனது 12வது வயதுக்குமேல் அவரது சிறிய தகப்பனாரிடம் அ,ஆ,இ என எழுத்துக்களை எழுதவும், படிக்கவும் கற்றுக்கொண்டார். அதன்பின் சில காலத்திற்குப் பிறகு தனது கணவர் மூலம் நன்கு எழுதப்படிக்கவும் கற்றுக்கொண்டார்.

இவரது முதல் படைப்பான இந்திர மோகனா என்கிற நாடகமானது இவர் சொல்லச் சொல்ல இவரது தோழியான டி.சி.பட்டம்மாள் என்பவரால் எழுதப்பட்டுள்ளது. இந்த நாடகமானது 1924ஆம் ஆண்டு நோபிள் அச்சகத்தாரின் மூலமாக அச்சேற்றமானது. சுவராஜ்யா, டெல்லி எக்ஸ்பிரஸ், மெட்ராஸ் மெயில், இந்து, சுதேசமித்திரன் மற்றும் நியு இந்தியா உள்ளிட்டப் பல பத்திரிகைகளும் இந்திர மோகனா நாடகத்தைப் பாராட்டி விமர்சனம் எழுதியுள்ளன. பல மேடைகளிலும் அந்த நாடகம் அரங்கேற்றம் ஆகியுள்ளது. இந்த வெற்றியைத் தொடர்ந்து, அருணோதயம், வத்சகுமார், தயாநிதி போன்ற நாடகங்களையும் பட்டம்மாள் உதவியுடன் எழுதியுள்ளார். பல புதினங்களையும், பல நாடகங்களையும் தனக்காக எழுதிக் கொடுத்த பட்டம்மாளுக்கு நன்றி கூறும் விதமாகத் தனது 6 வது புதினமான ஆத்மசக்தியை அவருக்கு அர்ப்பணித்துள்ளார்.

இவரது எழுத்துக்கள் வசீகரமாகவும், வாசகர்களை ஈர்க்கும் விதமாகவும் இருந்ததால் இவரது படைப்புகளுக்குப் பெரிய வரவேற்பு இருந்துள்ளது. இதைக் கணக்கில் கொண்ட கோதைநாயகி அவர்கள், 1925 ஆம் ஆண்டு, பெரும் நஷ்டத்தில் இயங்கிவந்த ஜகன் மோகினி என்ற பத்திரிகையை விலைக்கு வாங்கினார். அதில் தனது முதல் நாவலான வைதேகி எனும் துப்பறியும் நாவலைச் சுமார் ஓராண்டுக் காலம் தொடராக எழுதி வெளியிட்டுள்ளார். தன் கணவரின் உதவியோடு 1937 ஆம் ஆண்டில் ஜகன் மோகினிக்காகத் தனி அச்சகத்தைத் துவக்கி 35 ஆண்டுகள் தொய்வில்லாமல் நடத்தி, அதைத் தமிழகத்தின் முன்னணிப் பத்திரிகையாக்கினார். சமக் காலத்தின் நிகழ்வுகளை, வாழ்வியலைப் பதியவைத்த வரலாற்றுப் பெட்டகமாக ஜகன்மோகினி திகழ்ந்தது.

கோதைநாயகி அம்மாள் வெறும் எழுத்தாளர் மட்டுமல்ல. அவர் விடுதலைப் போராட்ட வீராங்கனையாகவும் செயலாற்றியுள்ளார். 1925ஆம் ஆண்டு மகாத்மா காந்தியை சென்னையில்



சந்தித்ததிலிருந்து தனது வாழ்நாள் முழுக்கக் கதராடை மட்டுமே அவர் உடுத்தி வந்துள்ளார். 1929ஆம் ஆண்டுத் துவங்கப்பட்ட சுதேசி லீக் என்கிற சங்கத்திலும், காங்கிரசிலும் தன்னை இணைத்துக்கொண்டு பல சுதேசி போராட்டங்களிலும், அந்நியத் துணி எதிர்ப்பு என ஆங்கிலேய அரசுக்கு எதிராகத் தன்னை ஈடுபடுத்தி, சுதந்திரத்திற்காகப் போராடியுள்ளார். 1932 ஆம் ஆண்டுக் கள்ளுக்கடை மறியலில் ஈடுபட்டதால் வேலூர் சிறையில் அடைக்கப்படுகின்றார். அவர் சிறையில் இருந்தபோதும் தனது எழுத்துப்பணியைக் கைவிடவில்லை. சிறையில் இருந்தவாறே, சுதந்திரப் போராட்ட அடிப்படையில் உத்தமசீலன் , சோதனையின் கொடுமை போன்ற புதினங்களையும் எழுதியுள்ளார். இவற்றினை வரலாறு மட்டுமின்றி வேலூர் சிறைச்சாலையின் மண்ணும், சுவர்களும் பத்திரமாகப் பதிவுசெய்து வைத்துள்ளது.

கோதைநாயகி அம்மாள் மகாகவி பாரதியாருடனும் நல்ல அறிமுகம் கொண்டவராகவே இருந்திருக்கின்றார். திருவல்லிக்கேணியில் பாரதியார் வசித்தபோது அவரது பாடல்களைக் கோதை பாடியதாகவும், அதைப் பாரதியார் ரசித்ததாகவும் வாய்மொழிப் பதிவுகள் தெரிவிக்கின்றன. பாரதி குறித்த தனது நினைவுகளை, "கவியரசர் பாரதியாரை நேருக்குநேர்ப் பார்த்தபோதும் சரி ... அவரது பாடல்களை ஆவேசம் தழும்ப அவரே பாடிக் கேட்டபோதும் சரி ... அவரது கடைசிக் காலத்தை ... அவரது சவ ஊர்வலத்தைக் கண்ணால் கண்டு கண்ணீர் விட்டபோதும் சரி ... கவியின் உள்ளுக்குள் ஒளிந்திருந்த அபூர்வ சக்தியை ... பெருமையை நான் உணரவேயில்லை" என்று 1947 ஆண்டு நவம்பர் மாத ஜகன்மோகினியில் எழுதியுள்ளார்.

நாடகம், பத்திரிகை, புதினம் எனச் செயல்பட்டுவந்த கோதைநாயகி அவர்கள் திரைப்படத் துறையையும் விட்டுவைக்கவில்லை. 1931 ஆம் ஆண்டிலிருந்து டாக்கி என்கிற பெயரில் தமிழ் சினிமா பேச ஆரம்பித்த பின்பான துவக்கக் காலத்திலேயே சினிமாத் துறைக்குள்ளும் பிரவேசிக்கின்றார். இவரது 34 வது புதினமான ராஜமோகன் திரைப்படமாகத் தயாரிக்கப்படும்போது, அந்தத் திரைப்படத்திற்கான வசனங்களையும் இவரே எழுதியுள்ளார். இந்தத் திரைப்படம் 1937 ஆம் ஆண்டுத் திரையில் வெளியானது. அடுத்ததாக, தனது 35வது நாவலான அனாதைப்பெண் -ஐ திரைப்படமாக எடுத்து வெளியிட முயற்சிக்கிறார். அக்காலத்தில் மிகப்பிரபலமாக இருந்த ஜூபிடர் பிக்சர்ஸ் நிறுவனம் தாமே முன்வந்து அம்மையாரது நாவலைத் திரைப்படமாகத் தயாரிக்கின்றது. இந்தத் திரைப்படத்தினை அக்காலத்தில் இந்தியா முழுக்கப் புகழ்பெற்று விளங்கிய திரைக்கலைஞனான ராஜா சாண்டோ நடித்து இயக்குகிறார். இப்படம் 1938 ஆம் ஆண்டுத் திரைக்கு வந்து தமிழ் திரையுலகில் கோதைநாயகி அம்மையாருக்கு நற்பெயரினை



சித்தி படத்தில் பத்மினி மற்றும் முத்துராமன்

வாங்கித்தந்தது. மேலும், அவரின் பல நாடகங்களும், புதினங்களும் திரைப்படமாகத் தயாரிக்கப்பட்டன. அவரது 55-வது புதினமான தயாநிதி யானது எம்.ஆர். ராதா, பத்மினி நடிப்பில் சித்தி என்கிற பெயரில் 1966 ஆம் ஆண்டு வெளியாகி மிகுந்த பாராட்டையும், நற்பெயரையும் பெற்றுத் தந்தது. இந்தப் படத்திற்குச் சிறந்த கதாசிரியருக்கான விருது உட்படப் பல விருதுகள் கிடைத்தன.

சிறந்த கதாசிரியைக்கான விருதானது அவரின் மரணத்திற்குப்பிறகு அறிவிக்கப்பட்டது என்பது மிக்க சோகமே. அம்மையார் திரைப்படத் தணிக்கைக் குழுவின் உறுப்பினராக 10 ஆண்டுகள் பணிபுரிந்தும் சினிமா தொண்டாற்றியுள்ளார். அவர் தான் தணிக்கைச் செய்தத் திரைப்படங்களில் தணிக்கைச் செய்யப்படத் துண்டுகள் வெட்டிக் கழிக்கப்படாமல் பொதுமக்கள் காட்சிக்கு உட்படுத்தப்படுகின்றனவா என்பதைத் தானே திரையரங்கங்களுக்குச் சென்று பார்வையிட்டு நடவடிக்கை எடுத்துள்ளார். உதாரணமாக, அதிர்ஷ்டம் என்கிற தணிக்கையான திரைப்படத்தில் தணிக்கைச் செய்யப்பட்ட காட்சிகள் வெட்டப்படாமல் திரையரங்குகளில் திரையிடப்பட்டதைத் தானே கண்டுணர்ந்து அதன்மீது நடவடிக்கை எடுத்து மீள் தணிக்கைக்கு உட்படுத்தியுள்ளார்.

அவர் சினிமாவில் பணிபுரிந்தாலும் சினிமாவின் சீர்கேடுகளைத் தான் எழுதிய புதினங்களின் கதாபாத்திரங்கள் வழியாகத் தொடர்ந்து சாடியே வந்துள்ளார். அவரது நாவல்களான இதயஒலி, பிரதிஞ்சை, கானகலா, இன்பஜோதி போன்ற புதினங்கள் இதற்கான உதாரணங்கள். சுதந்திரத்திற்கு முற்பட்ட காலத்திலேயே பொதுவெளியில் பெண் விடுதலைக் குறித்த பல செயல்பாடுகளில் தன்னை ஈடுபடுத்தியும் வந்துள்ளார். அவரது செயல்பாடுகளின் வடிவிலேயே அவரது படைப்புகளும் இருந்துள்ளன. குழந்தைத் திருமணம், விதவை மறுமணம், மத ஒற்றுமை ஆகியவற்றை வலியுறுத்தியே இவரது படைப்புகளும் இருந்துள்ளதை இன்றும் நாம் காணலாம். 1925ஆம் ஆண்டு எழுத ஆரம்பித்த கோதைநாயகி அம்மாள் தனது வாழ்நாளில் 35 ஆண்டுகளில், நாடகங்கள், புதினங்கள், சிறுகதைத் தொகுப்புக்கள் என 115 படைப்புகளைத் தமிழ் படைப்புலகிற்கு அளித்துள்ளார்.

அவரது ஒரே மகனான வை.மு. ஸ்ரீநிவாசனின் எதிர்பாராத திடீர் மரணத்தினால் உருக்குலைந்துபோன அவர், நீடித்த காசநோயால் பாதிக்கப்பட்டு 1960 பிப்ரவரி 20-ம் நாள் தனது 58 வது வயதில் தாம்பரம் நெஞ்சக மருத்துவமனையில் மரணித்தார். அவரது நினைவைப் போற்றும் விதத்தில் அமுதசுரபி இதழானது ஆண்டுதோறும் கோதைநாயகி அம்மாள் பெயரில் குறுங்கதைப் போட்டியை நடத்திப் பரிசளித்து வருகிறது. தமிழ் படைப்புலகமும், பத்திரிகை உலகமும், திரையுலகமும் என்றென்றும் நினைவில் கொள்ளவேண்டிய கோதையை வரலாறும் பேசிக்கொண்டேயிருக்கும் அவ்வப்போது.

# மங்கா தேவி 2 (தொடர்)

## கோமகள் குமுதா

ஓவியம்: பூரணி

அத்தியாயம் -- 3

அவள் மீண்டும் மயக்கத்தினால் கண்களை மூடியதும் சொக்கன் செய்வதறியாது திகைத்தான். அந்தச் சமயத்தில் மாலை கழிந்து முழுமதியும் வானவீதியில் வலம் வரத் துவங்கவே சொக்கனின் மனநிலை விவரிக்க இயலாததாயிருந்தது. விவரணத்திற்கும் அப்பாற்பட்ட அந்த ஏந்திழையின் பூர்ண அழகை நன்றாக எடுத்துக் காட்டிய பூரணசந்திரனைப் பெரிதும் வெறுத்தான் அந்த இளைஞன். சந்திரன் சுத்த அற்பன் கண்ணியமில்லாதவன். மல்லாந்து கிடந்த நிலையில் அவள் கழுத்திலும் கழுத்தையடுத்து கீழே எழுந்து நின்ற இரு பங்கயங்களின் மீதும் கிரணங்களை பாய்ச்சினான் சந்திரன். சொக்கனின் கண்கள் மட்டும் அவள் எழிலைப் பருகவும் எடை போடவும் தவறவில்லை. அவன் இதயத்தில் ஆயிரமாயிரம் கவிதைகள் ஊற்றெடுத்து பொங்கிப் பிரவாகித்தது.

இவ்வளவு பேரழகான வானத்து தேவதையை இப்படி பூமியில் கிடத்தியது யார்!!!

அல்லிக்கொடியே
உன் செந்தாமரை முகம் ஏனடி இப்படி வாடிகிடக்குது

செவ்வரியோடிய உன் பங்கயற் கண் மலர்களில் என் உயிர் வரை ஊடுருவும் கருப்பு வைரப் பூக்களை காண எனக்கு இந்த ஒரு ஜென்மம் போதாதேடி

வெண்சங்கு புஷ்பக் கழுத்திலும், சந்தனபூத் தோள்களிலும் என்தலை சாய்ந்தால் அந்த நொடியே மரணதேவன் என்னை கொண்டு போனாலும் போகட்டும்.



தாமரை மொட்டுகளும் ஆலிலை கண்ணனே மயங்கும் இடையும் மடல் வாழை கால்களும் சந்தன மரத்தில் கடைந்த செம்பஞ்சு பாதங்கள் பிரம்மனின் அற்புதமடி

என் ஆவி உருகி அமர்ந்திருக்கிறேனடி உன் அருகிலே

இத்தனை வண்ணமலர்கள் ஒரே கொடியிலா !!!

என் மனம் எப்போது வீழ்ந்தது உன்னிடம் நீ என்னைப் பார்த்த அந்த நொடியிலா !!!

இப்படி ஆயிரமாயிரம் சொற்கள் அவன் இளமனதில் பொங்கிப் பெருகியது.சொக்கன் தனக்குத் தானே சிரித்தான்.ஒரு பெண்ணை இவ்வளவு அருகில் முதன் முதலாக பார்த்த தனக்கே இவ்வளவு கவிதைகள் எழுகிறதென்றால் நாள்தோறும் பெண்களின் அழகை வர்ணிக்கும் பாவலர்களின் மனம் கவிதைகளால் நிரம்பிய கடலாக இருப்பதில் வியப்பொன்றுமில்லை. பெண்ணின் அழகு எப்பேர்பட்ட ஆணின் இதயத்தையும் அசைக்கவல்லது என்று எண்ணியபடி சிரித்தான்.

மண்ணில் விழுந்து கிடந்த அவள் தலைக்குழல்கள் கலைந்திருந்தாலும் வழவழத்த கன்னங்களிலொன்றில் ஒட்டிக் கிடந்த மண் சந்தனத்துூளை லேசாகத் தூவிவிட்ட பிரமையையே அளித்தது.அம்பு தொடுக்க இழுக்கப்பட்ட விற்களைப் போல் காட்சியளித்த வளைந்த புருவங்கள் அவள் உள்ளத்து வேதனையால் சிறிது சுருங்கிக் கிடந்தாலும் அதிலும் ஓர் அழகு இருக்கவே செய்ததை அந்த வீரன் அறிந்தான்.கடலின் சிப்பிகளைப் போல் மூடிக்கிடந்த நிலையிலும் அவள் கண்மலர்களில் ஒரு கம்பீரம் இருந்தது.உதடுகள் கெம்பு கற்கள் போல் ஈரம் படர்ந்து செக்கச் செவேலென்று தெரிந்தன. சொக்க நாதனின் கண்கள் அந்தப் பெண்ணின் சங்கு கழுத்தையும் அடுத்து எழுந்த மார்பையும் கடந்து வயிற்றுக்கும் சிறிது கீழே தெரிந்த கொடியிடையைக் கண்டதும் மயக்கம் அவளுக்கல்ல தனக்கு தானென்று சொல்லிக் கொண்டான்.

இருப்பது பொய்யோ என்று மிகவும் சிறுத்துக் கிடந்த இடையைக் கண்ட சொக்கன் அதற்கு கீழே சேலை நன்றாக வரிந்து கட்டியிருந்த காரணத்தாலேயே திண்மை அதிகமாகத் தெரிந்த இரு தொடைகளையும் இரண்டும் இணைந்த இடத்தில் சேலை சிறிது குறுகி புகுந்து சூசகமாக அறிவித்த இந்திர ஜாலத்தையும் கண்டு திகைத்தான்.மேலும் உணர்வுகளைக் கட்டுப்படுத்த இயலாமல் வேகமாக எழுந்து நடந்து சென்று நீர் கொண்டுவந்து அவள் முகத்தில் அடித்தான்.

நீர் தெளிக்கப் பட்டதால் திறந்த கருமணிக் கண்கள் அந்த புதியவனைத் தைரியமாகவே பார்த்தன.தனது சேலையைச் சிறிது இறுக்கி மூடப்பட்டிருந்ததையும் விநாடி நேரத்தில் உணர்ந்து கொண்டாள் அந்தக் கட்டழகி.ஆண்களுக்கு ஆத்திரம் இருக்கிறதே தவிர எதையும் ஒழுங்காகச் சுவடு தெரியாமல் செய்து முடிக்கத் தெரியவில்லை என்று தனக்குள் அவள் எண்ணமிட்டதால் அவள் கண்கள் அவன் கண்களைப் பார்த்து வெட்க நகை நகைத்தது. அவள் இடதுகை சேலையை சிறிது நன்றாகப் போர்த்திக் கொண்டது.

அந்தச் சமயத்தில் அவள் ஏதோ பேச முற்படவே அவன் " பெண்ணே உனக்கு இப்பொழுது எப்படி இருக்கிறது? ஏன் இப்படி ஓடி வந்தாய்? யார் அவர்கள் என்று வினாக்களைத் தொடுத்தான். முன்பின் தெரியாத அந்தக் கட்டழகியின் முழுமதியைப் பழிக்கும் முகத்தில் முளைத்திருந்த பங்கய விழிகள் சொன்ன செய்தியால் அவள் முதுகில் இருகைகளையும் கொடுத்து அந்தப் புஷ்பக் கொடியை அப்படியே அள்ளித் தூக்கி அருகிலிருந்த மரமல்லி மரதண்டில் அவளை சாய்த்து உட்கார வைக்க முயன்ற போது அவள் இளமனம் பெரும் அவதிக்கு உள்ளானதால் அவன் தூக்கிக் கொண்டதன் காரணமும் சேலையை மூடிப் போர்த்தியதும் கண்ணியமான எண்ணத்தினால் ஏற்பட்ட செய்கைகள் என்பதை அவள் உணர்ந்திருந்தும் அவள் பருவம் அவளை அலைக்கழித்தது.

பேசினால் உணர்வுகள் சிறிது மட்டுப்படலாம் என்று நீங்கள் .....என்று அவள் ஏதோ கேள்வி கேட்டதும் சொக்கநாதனும் தன்னைக் கட்டுபடுத்திக் கொண்டு அவள் கேள்விக்கு பதில் சொல்ல ஆரம்பித்ததால் அவள் மனம் கொஞ்சம் இன்ப எண்ணங்கள் பின்னிய வலையிலிருந்து விடுபட்டது. மெல்ல அவளை அங்கிருந்த மரமல்லி மரத்தடியில் மேடாக இருந்த இடத்தில் உட்கார வைத்திருந்தான்.

"பெண்ணே நீ இப்படித் தனியாக வந்து ஏன் இந்தக் கயவர்களிடம் மாட்டிக் கொண்டாய்? இதற்கு அவள் உடனே பதிலேதும் சொல்லவில்லை. சிறிது நேரம் கழித்து சொக்கநாதனைப் பார்த்துச் சொன்னாள்." இதோ நாமிருக்கும் இந்த சோலையை அடுத்து எங்கள் நாட்டின் எல்லையில் சத்திரமொன்று இருக்கிறது.

என் தந்தையின் பகைவர்கள் எப்படியாவது என்னைக் கடத்திக் கொண்டு சென்று மதுரை நாயக்கனுக்கு மணமகளாக்க முயற்சி செய்கின்றனர்." ஏன் உன் தந்தைக்கு மதுரை நாயக்கனுக்கு உன்னை மணம் முடித்துக் கொடுக்க விருப்பமில்லை?. "அவன் ஒரு கோழை.தளவாய் இராமலிங்க நாயக்கனின்



கைப்பாவையாக குடிகாரனாக பெண்பித்தனாக அரண்மனையே கதியென்று வாழ்பவன்.வீரமில்லாத பேடிக்கு மகளைத்தர எந்த தகப்பனுக்குத் தான் பிடிக்கும்?. " என்று வினவிய அவளையே உற்றுப் பார்த்தபடி உன்னைப் பிடிக்க வீரர்களை அனுப்பியவனை நீ இதற்கு முன் பார்த்திருக்கிறாயா? என்று சொக்கன் கேட்டான்." நான் வேட்டையாட இங்கே அடிக்கடி எங்கள் நாட்டின் எல்லையிலுருக்கும் இந்தச் சத்திரத்திற்கு வந்து சில நாட்கள் தங்குவேன்.

இதை ஒற்றர்கள் மூலம் அறிந்த மதுரை நாயக்கனின் சகோதரன் மாற்றந்தாய் பிள்ளை அழகிரிநாயக்கன் இருமுறை என்னை இங்கு வந்து மடக்கினான். இருமுறையும் என்னிடம் வீரர்கள் அதிகமாயிருந்ததால் அவனை விரட்டி விட்டேன். இனி அவன் வரமாட்டான் என்ற தைரியத்தில் நான்கு வீரர்களை மட்டுமே இம்முறை அழைத்து வந்தேன். அவனுக்கு எப்படியோ தெரிந்திருக்கிறது.இம்முறை இருபது பேருடன் என்னை மடக்கினான்.நீங்கள் தடுத்திராவிட்டால் என்னை இன்றிரவு கொண்டு போயிருப்பான்." என்று யாரோ சம்பந்தமில்லாதவர்கள் கதையைச் சொல்பவள் போல் அவள் தன் கதையைச் சொன்னாள்.

நீங்கள் யார் ? எப்படி தனியாளாக அவர்களை சமாளித்திர்கள்? என்று வினவினாள் தஞ்சையின் இளவரசி மங்கலதேவி.

"நான் ஒரு வழிபோக்கன்.நாடோடி போல் திரிபவன்.எங்கே போர் நடந்தாலும் நானும் கலந்து கொள்வேன்.பிறந்தது வளர்ந்தது எல்லாம் மதுரையில் தான். ஆனால் இப்பொழுது எனக்கு அங்கே உறவு என்று சொல்ல யாருமில்லை என்று பாதி உண்மையும் பாதி பொய்யும் கலந்து அவள் கேள்விக்கு பதில் கூறினான் சொக்க நாதன்." உங்களைப் பார்த்தால் நல்ல குடும்பத்தைச் சேர்ந்தவர் என்பது தெரிகிறது." அப்படியா? நான் அவர்களைப் போல் உன்னைத் துன்புறுத்த மாட்டேன் என்றா சொல்கிறாய் என்று கண்கள் கேலியாக நகைக்க குறுகுறுவென்று அவளைப் பார்த்தான்.

பாதுகாப்புக்கு போதவே போதாத நாலைந்து வீரர்களுடன் ஒரு காட்டில் எதிரியின் காவலாட்களிடம் அகப்பட்டு பேராபத்திலிருந்த அந்தச் சமயத்திலும் அவன் கூறியதைக் கேட்டு அவள் அலட்சியமாக நகைத்ததைக் கண்ட சொக்கநாதனின் சிந்தனைகளும் சற்றே உடைபட்டதன்றி அவன் கண்களிலும் ஆச்சரியம் ததும்பியது. " பெண்ணே நம்மைச் சூழ்ந்திருக்கும் சந்தர்ப்பங்கள் தீவிரமாகும் போது நாம் கவனமாக இருக்க வேண்டும் என்று கூறினான்.

எந்த ஆண் மகனையும் அதுவரை சட்டை செய்யாமல் சதா வாளும் கையுமாக சுற்றிக் கொண்டிருந்த அந்தச் சுதந்திரப் பெண்ணின் உள்ளத்திலே சற்று முன்பு சந்தித்த அந்த ஊர் பேர் தெரியாத வாலிபனிடம் அவளுக்கு எல்லையற்ற அன்பு தோன்றியது.

அவன் யார் என்பது அறிந்தால் அந்த அன்பு நீடிக்குமா பார்க்கலாம் வாருங்கள் அடுத்த அத்தியாயத்தில்.

### அத்தியாயம் -4

அவளைக் கண்ட நேரத்திலிருந்து சொக்கனின் உள்ளமும் பலவித குழப்பங்களுக்கு இரையாகியிருந்ததால் அவள் பேச்சிலிருந்து அவள் தஞ்சையின் மன்னன் விஜயரங்க நாயக்கனின் புதல்வி என்று தெரிந்த பிறகும் கூட தான் அவளுக்கு கொடுக்க வேண்டிய மரியாதையிலிருந்து வழுவி விட்டோமோ என்ற நினைப்பே அவன் சித்தத்தில் சுழன்றது. " தேவி தற்போது உனக்கு கால்வலி எப்படி உள்ளது?" என்று வினவிய அவன் பேச்சில் மரியாதை தொனிப்பதைக் கண்டு வியந்து நோக்கினாள் மங்கலதேவி. "இந்தா உன்னுடைய வாள்" என்று சிரித்தபடி தன் வாளை நீட்டிய அவன் முகத்தை மெல்ல ஏறிட்டு பார்த்தவளுக்கு நிச்சயம் அவன் உயர்குடியில் பிறந்தவன் என்பது அவன் வாளை பிடித்திருந்த நேர்த்தியே சொல்லியது. அவன் முன்கையில் இருந்த வடுக்கள் அவன் சிறந்த வாள்வீரன் என்பதை பறைசாற்றியது.

"பெண்கள் வாயிற்படியைத் தாண்டக்கூடாது என வரையறை இருக்கிறது.ஆனால் அந்த எல்லைக்குள் எல்லோரும் நின்றுவிட முடிகிறதா? வீட்டுக்காக ஏற்பட்டவர்கள் பெண்கள் என்று வரையறை உள்ளது.அந்த எல்லைக்குள் எத்தனை பேர் அடங்கியிருக்கிறார்கள்" என்று சொக்கநாதன் பரிகாசம் ததும்ப தன் விழிகளை அவள்மீது ஓடவிட்டான்.

"உன்னைப் போன்ற வாள் மங்கைக்கு இந்த வரையறை பொருந்தாது." என்று கூறிய அவனைப்பார்த்து இவன் என்னை கேலி செய்கிறானா? அன்றி பாராட்டுகிறானா? என்று விளங்காமல் இருந்தாலும் தன்னைப் பரிகசிக்கும் அவன் துணிவைக் கண்டு சற்று இரைந்தே நகைத்து விட்டாள்.

அவள் சிரிப்பின் அர்த்தத்தை புரிந்து கொள்ள முடியாத சொக்கன் "ஏன் சிரிக்கிறாய்? என்று கேட்டான்."பெண்கள் இருக்க வேண்டிய முறையைச் சொன்னீர்கள்".

"ஆமாம்"

"அது எனக்கு பொருந்தாது என்று என்னிடமே கூறினிர்கள்.ம்ம்..அப்படியென்றால் நான்



பெண்ணில்லை என்ற கருத்து வருகிறது". "தேவி நீ எண்ணுவது தவறு மதுரையம்பதி மீனாட்சி தேவி கைகளில் வாளும் வேலும் ஏந்தி போர் புரிந்து இறுதியில் பரமனையே எதிர்த்து போரிட கைலாயம் சென்றாள்.அந்த வீரமகளுக்குக் கூட நான் சொன்னது பொருந்தாதே. அதனால் தேவி மீனாட்சி பெண் இல்லை என்றா அர்த்தம்.அன்னை இந்த அகிலத்தையே கட்டிக்காக்கும் வீரத்தின் விளைநிலமல்லவா? தேவி நீ பெண் இல்லையென்றால் பார்க்கும் விழிகளில் தான் தவறு இருக்கிறது உன்னிடமல்ல" என்று சொக்கன் பேசிக் கொண்டிருந்த போது தடதடவென்று புரவிகள் வரும் காலடியோசை சற்று தூரத்தில் கேட்டது." இதோ வருகிறேன் தேவி என்று சற்று எட்டயிருந்த பெரிய மரத்தின் பின்னால் கட்டியிருந்த தன் புரவியை அவிழ்க்கச் சென்றான்.

வாளை கையிலெடுத்து நிலத்திலூன்றி இளவரசி மங்கலதேவி எழுந்து நின்றபோது தஞ்சையின் வீரர்கள் வந்து புரவியை விட்டு கீழிறங்கி தங்கள் இளவரசிக்கு தலைதாழ்த்தி வணங்கினர்.வீரர் தலைவன் ஒரு புரவியின் கடிவாளக் கயிற்றை இளவரசியிடம் பணிவாகத் தர அதை வாங்கி தாவிஏறி புரவியைச் செலுத்தினாள் இளவரசி மங்கல தேவி.சற்று நேரத்தில் அந்த மரத்தினடியில் இருள் சூழ்ந்தது.நிசப்தமான அந்த நேரத்தில் அங்கே நின்று ஆகாயத்தை நோக்கி சிந்தித்த சொக்கநாதன் புரவியில் காட்டின் கிழக்கு திசையை நோக்கி பயணித்தான்.

பௌர்ணமி முடிந்து இருதினங்களே ஆனதால் வெண்மதியின் கிரணங்களால் அந்தக் கோயிலின் கலசம் தகதகவென்று மின்னியது.ஆற்றில் வெள்ளியை உருக்கி ஊற்றியதுபோல் பால்நிலவு தண்ணீரை தகதகக்க செய்திருந்தது. ஆற்றுநீரில் விளையாடிய தோழிகளிருவரும் பேசியபடி நகைத்தது வெள்ளிக்காசுகளை உருட்டியது போல் கலகலத்தது. அரசலாற்றின் நீரோ அந்தப் பெண்களின் நகைப்பைக் கண்டு தானும் நகைக்க ஆசைபட்டவளாய் சலசலவென்று ஓடியவள் சுழித்து சுழித்து களுக் களுக் என்று கிளுக்கினாள் அந்த நதியழகி." இளவரசி நீங்கள் இனி எங்கு சென்றாலும் நானும் உடன்வருவேன். எதாவது நடந்திருந்தால் என் உயிர் ஒரு நொடியில் போய்விடும்.நீங்கள் இல்லாத உலகில் எனக்கு என்ன வேலை என்று வந்ததிலிருந்து அரற்றி அழுத அவளை அணைத்து எவ்வளவோ முறை ஆறுதல் கூறியும் அவள் விசும்பியது மங்கலதேவியின் மனதை கரைத்தது.

எனக்கு வாக்கு கொடுங்கள் இளவரசி இனிமேல் என்னை விட்டு எங்கும் நீங்கள் போவதில்லை என்று உறுதி தாருங்கள் என்று சிறுபிள்ளை போல் தன்னைக் கட்டிக் கொண்டு அழும் அவளை சமாதானப் படுத்த "சரி மங்கா என் கண்ணே அழாதே.இன்று நான் உனக்கு ஒரு புதுக்கதை சொல்கிறேன். கேளடி என் செல்லமே என்று தன்னைக் கொஞ்சிய அந்த பால்மணம் கொண்ட பசுங்கிளியின் வாயைத் தன் கரங்களால் பொத்தி "இளவரசி நீங்கள் ஆணையிடுங்கள். இந்த தோழியின் உயிர் உங்களுக்கு தான்.ஆனால் இனி உங்களைப் பிரிந்திருக்க மட்டும் சொல்லாதிர்கள் அதை இனிமேல் என்னால் தாங்க முடியாது இளவரசி என்று கண்களில் நீர்மல்க மன்றாடிய தன் ஆருயிர்தோழியை இறுகத் தழுவி, "அப்படியே ஆகட்டும் மங்கா. இனி நான் எங்கு சென்றாலும் நீயும் உடன் வருகிறாய் போதுமா .சரி வா இரவு நேரம் மிகவும் ஏறிவிட்டது அரண்மனை செல்வோம் என்று மங்காவின் கைகளை இழுத்துக் கொண்டு ஆற்றிலிருந்து கரையேறிச் சென்றனர்.

நாட்கள் கடகடவென்று ஓடி மறுபடியும் ஒரு நிலாக்காலம் முடிந்து தேய்பிறை பத்து நாட்கள் கடந்தது.மங்கலான நிலவொளியில் தஞ்சையின் நந்தவனத்தின் தென்கோடியிலிருந்த மிகவும் இருண்ட அந்த கொடிவீட்டை நாடி ஆறடியுள்ள ஒரு நிழலுருவம் மரங்களின் இருளில் மறைந்து மறைந்து சென்று கொண்டிருந்தது.

ஓ.....அவன் யார் தஞ்சை மன்னனைக் கொல்ல வந்தவனோ!!!!

காத்திருங்கள் அடுத்த மாதம் பார்ப்போம் வாசகர்களே.

தொடரும்......



# கோவையின் கொடை ஜி.டி.நாயுடு

இராசு. சரவணன் ராஜா, வேலூர்

புகைப்படங்கள்: சரவணராஜா மற்றும் ஷன்மதி

இருபதாம் நூற்றாண்டில் பல அற்புத விஞ்ஞானிகள் உண்டு. அதில் முதன்மையான அறியக் கண்டுபிடிப்பாளர்கள், எந்த பல்கலைக் கழகத்திலும் படித்தறியாதவர்கள் என்பதுதான் புதுமை! இதற்கு எடுத்துக்காட்டாக, ஹென்றி போர்டு, தாமஸ் ஆல்வா எடிசனும் ஆவர். இதே வரிசையில் தமிழ்நாட்டில், கோவையில் இருந்து திரு. கோபால் துரைசாமி நாயுடு (சுருக்கமாக ஜி.டி. நாயுடு) கல்லூரி படிப்பு இல்லாவிட்டாலும், தன் திறமையான உழைப்பால் உயர்ந்து மோட்டார் போக்குவரத்து தொழிலில் சிகரம் தொட்டவர் மட்டுமின்றி, பல அறியக் கண்டுபிடிப்பாளராகவும் இருந்தவர்.

அவினாசி சாலையில் உள்ள தம் இல்லமான கோபால் பாக்கில், 1948ஆம் ஆண்டில் ஒரு தொழிற் கண்காட்சி சாலை, நாயுடுவின் முயற்சியால் தொடங்கப்பட்டு, "இண்டஸ்ட்ரியல் லேபர் வெல்பேர்" மேற்பார்வையின் கீழ் நடத்தப்பட்டது. இயந்திரம் என்பது என்ன என்று அறியாத பாமர மக்களுக்குத் தொழிற்சாலையில் எப்படி இயந்திரம் இயங்குகின்றன என்பதைப் பற்றியும், அவை மனிதவர்கத்தின் முன்னேற்றத்திற்கு எவ்வாறு உபயோகப்படுகின்றன என்பதை எடுத்துக்காட்ட வேண்டும் என்ற எண்ணத்துடன் இந்த கண்காட்சிச்சாலை ஆரம்பிக்கப்பட்டது.

கோவை அவினாசி சாலையில் இவரது












இல்லத்திற்கு எதிரே 13 ஆயிரம் சதுர அடியில் பரந்து காணப்படும் ஜி.டி. அறிவியல் கண்காட்சியில் தனது கண்டுபிடிப்புகளும், பல்வேறு அறிவியல் கருவிகளும், இயந்திர பொருள்களும் அடுக்கி வைக்கப்பட்டுள்ளன.

ஒரு பிரம்மாண்டமான பாதாள அறையை நிர்மாணித்து, அதன் உள்ளே பழமையான கார்கள் முதல் இன்று வரை உள்ள நவீனமயமான கார்களுடன் அமைக்கப்பட்டுள்ள பிரத்தியேக அருங்காட்சியகம், ஆட்டோமொபைல் தொழில்நுட்ப பிரிவினரை மட்டும் இல்லாது சாதாரண பொது மக்களையும் கவரும் வகையில் அமைக்கப்பட்டுள்ளது.



"MR. G.D. NAIDU'S FIRST MOTOR CYCLE"

In the year 1921, when Mr. G. Duraisamy was 17 years old, he was working in his father's farm at Kalangal Village, a suburb of Coimbatore. When he was in the farm, a tall middle aged European came on the road in a strange looking vehicle having two wheels and creating a funny noise. Mr. Duraisamy was extremely curious as to how the man is moving without any effort and he was immediately attracted to this curious device.

The White man was Mr. Lancashire, a Revenue Officer of the British Government who was attending to the Government survey and settlement work in Coimbatore. He went about the place in his motor cycle, which was the third vehicle in Coimbatore - the first was a car owned by Mr. Robert Stanes and the third was this motor cycle owned by Mr. Lancashire. When Mr. Lancashire was passing near the farm of Mr. Duraisamy there was some engine trouble. Mr. Duraiswamy immediately ran to the motorcycle and Mr. Lancashire asked for a rag-cloth and some kerosene which Mr. Duraisamy immediately fetched and after cleaning the spark plug started the engine and moved away.

Mr. Duraisamy looked at the White man with curiosity and thought that this white man must be suffering from leprosy. More than anything else, Mr. Duraisamy was so enamoured by the motorcycle that he could not sleep in the nights. He was curious about how something could move without any physical effort.This curiosity made him go crazy that he walked all the way to Coimbatore with the intention of buying the motorcycle.

He worked in a small restaurant and tried to save money to buy the motorcycle and at the same time met Mr. Lancashire often. He volunteered to clean the motorcycle in the evenings and at the same time he learnt how to use screwdrivers and spanners for minor maintenance work. Mr. Lancashire noticed the young Duraisamy's desire to purchase the vehicle and within a year, as he was transferred he sold the motor cycle to Mr. Duraisamy for less than Rs.300/.

This was the first introduction to mechanics and mechanism to Mr. G.Duraisamy who dismantled the motor cycle many times and learnt all about automobiles, engines etc. He did all this by sheer self experiment and effort.

*ஜி.டி. நாயுடு வரலாறு*

*1921ஆம் ஆண்டுக் கோவை அருகே கலங்கல் கிராமத்தில் 17 வயது இளைஞர் தனது தந்தையின் வயலில் வேலை செய்து கொண்டிருந்தார். அதுவரை மிதிவண்டியை மட்டுமே பார்த்த ந்த இளைஞர் அச்சமயம் வெள்ளைக்காரர் ஒருவர் தன்னிச்சையாக இயங்கக்கூடிய வாகனத்தை ஓட்டிவந்ததைப் பார்த்ததும் ஆச்சரியம் அடைந்தார். அந்த வாகனத்தில் ஏற்பட்ட கோளாறு காரணமாக, திடீரென்று வாகனம் நின்றுபோனது. அதை ஓட்டிக்கொண்டு வந்தவர் ஏதாவது உதவி கிடைக்குமா என்று சுற்றும் முற்றும் பார்த்தார். அந்த இளைஞர் ஓடி வந்து என்ன வேண்டும் என்று கேட்டார். அதற்கு அவர் சிறு துணியும், மண்ணெண்ணெய்யும் வேண்டும் என்றதும் அதைத் தந்து உதவினார். அந்த இயந்திரத்தைச் சரி செய்து கொண்டு வெள்ளைக்காரர் அங்கிருந்து சென்றுவிட்டார்.*

*அந்தப் புதுமையான வாகனம் இளைஞரைப் பலநாட்கள் தூங்கவிடவில்லை. எந்தவிதமான உடலுழைப்பும் இல்லாமல் எப்படி ஒரு மனிதனால் ஓரிடத்திலிருந்து இன்னொரு இடத்திற்குச் செல்லமுடியும் என்ற கேள்விக்குப் பதிலைத் தேடிக்கொண்டே இருந்தார் அந்த இளைஞர். முடிவில் அந்த வெள்ளைக்காரரைத் தேடிச் சென்று அதைப் போன்று ஒரு வாகனத்தை வாங்கிவிட முடிவு செய்தார். தன் கனவை நோக்கி நடந்தே கோவையைச்*





சென்றடைந்தார்.

ஓர் உணவு விடுதியில் வேலை செய்து கொண்டே, அந்த வெள்ளைக்காரரோடு பழகி மாலை வேலைகளில் வண்டியைச் சுத்தம் செய்யும் வேலையைப் பெற்றுக்கொண்டார். சுத்தம் செய்யும் நேரத்தில் வண்டியைப் பழுது பார்ப்பது எப்படி என்றும் அறிந்துகொண்டார். இளைஞருக்கு வண்டியின் மேல் இருந்த ஆர்வத்தை வெள்ளைக்காரரும் புரிந்து கொண்டார். திடீரென்று வெள்ளைக்காரருக்குப் பணிமாற்றம் வர இளைஞர் வண்டியின் மேல் வைத்திருந்த ஆர்வம் காரணமாக வண்டியை இளைஞருக்கு 300 ரூபாய்க்கு விற்றுவிட்டுப்






பயணப்பட்டார். இயந்திரங்கள் மற்றும் இயந்திரவியல் தொடர்பான இளைஞரின் பயணம் அங்கே ஆரம்பமானது. இந்தக் கதையில் வரும் இளைஞர் ஜி.டி. நாயுடு எனப்படும் ஜி. துரைசாமி நாயுடு மற்றும் அந்த வெள்ளைக்காரர் பிரிட்டிஷ் அரசாங்கத்தின் வருவாய் துறை அதிகாரி லேண்ட் கேஷியர்.

இதைப் பற்றி கோவையை சேர்ந்த மரபுசார் செய்தியாளர் செல்வி. ஷன்மதி கூறுகையில், " திரு கோபால்சாமி துரைசாமி நாயுடு என்கிற ஜி.டி. நாயுடு கோயம்புத்தூர் மாவட்டத்திலுள்ள கலங்கல் கிராமத்தில் பிறந்தார், இவர் ஒரு சிறந்த அறிவியல் அறிஞர், தொழிலதிபர், ஒளிப்படக் கலைஞர், மற்றும் மனிதநேய ஆர்வளர் ஆவார். மின்சாரவியல், விசையியல், ஊர்தித் தொழில்துறை, வேளாண்மை போன்ற துறைகளில் சுயமாக புத்தகங்களை படித்து அறிவை வளர்த்து முன்னேறி பட்டப்படிப்பின்றியும் சாதனைகள் புரியலாம் என்று உலகுக்கு நிரூபித்தவர். இந்தியாவிலேயே முதன் முதலாக மின்சார மோட்டார் உற்பத்தி செய்யும் தொழிற்சாலை கோவையிலேயே துவக்கப்பட்டது என்ற பெருமை அவரையே சாரும்.

எதைச் செய்தாலும் அதில் தன்னுடைய தனித்தன்மை வெளிப்படவேண்டும் என்று நினைத்தவர். அயல்நாட்டு விஞ்ஞானிகளுக்கு இணையாக நம் நாட்டிலும் அறிவியல் துறையில் சாதனைப் புரிய இயலும் என்று உலகுக்கு நிரூபித்தவர் நாயுடு. தொழிற்கல்வியின் முக்கியத்துவத்தை உணர்த்தியது மட்டுமன்றி தன் சுயமுயற்சியினால் பாலிடெக்னிக் மற்றும் பொறியியல் கல்லூரிகளை கோவையில் துவக்கினார். அக்கல்லூரி தற்போது அரசினர்




தொழில்நுட்பக் கல்லூரி, கோயம்புத்தூர் (GCT) என அறியப்படுகிறது.

அந்நாளிலேயே யுனைடெட் மோட்டார் சர்வீஸ் என்ற நிறுவனத்தை துவக்கி பிரயாணிகளுக்கான வசதிகள், ஓட்டுனர்களுக்கு தங்கும் இடம் போன்று வசதிகளை செய்து காட்டியவர் நாயுடு. அவர் செய்து வந்த மோட்டார் வாகனத் துறைக்கு முற்றிலும் மாறுபட்ட துறைகளிலும் அவருடைய கண்டுபிடிப்புகள் தொடர்ந்தன. ஜெர்மன் நகரில் நடைபெற்ற பொருட்காட்சியில் அவருடைய கண்டுபிடிப்புகளில் ஒன்றான சவரக் கத்தி, பிளேடு ஆகியவற்றிற்கு முறையே முதல் பரிசும், மூன்றாவது பரிசும் கிடைத்தன.

கோவை அவினாசி நெடுஞ்சாலையில் அமைந்துள்ள இவரது ஜி.டி. நாயுடு அருங்காட்சியகத்தில் 1886-ம் ஆண்டு வடிவமைக்கப்பட்ட பென்ஸ் மோட்டார் வேகான் கார் முதல் நவீன கால ஸ்போர்ட்ஸ் கார் என மிகப்பெரிய மோட்டார் வாகனத் தயாரிப்பு நிறுவனங்களால் தயாரிக்கப்பட்ட கிட்டத்தட்ட 50-க்கும் மேற்பட்ட கார்கள் உள்ளது. பல ஆண்டுகள் பழமை வாய்ந்த சில கார்கள் ஜி.டி.நாயுடு மற்றும் அவரது குடும்பத்தினரால் வாங்கப்பட்டவை. 8 பழமையான கார்கள் அதனை பயன்படுத்திய நபர்களிடம் இருந்து அருங்காட்சியகத்துக்காக









பெறப்பட்டு காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன.

ஜேம்ஸ் பாண்ட் படங்களில் வரும் சிகரெட் லைட்டர், கேமராக்களும் அங்குள்ளது. இவரை இந்தியாவின் எடிசன் என்றே அழைக்கலாம்" என்றார்.

ஒரு நூற்றாண்டுக்கு முன்பு தயாரிக்கப்பட்ட கார்கள் முதல் இன்றைய நவீனமயமான கார்கள் வரை மொத்தம் 70 பழம்பெரும் கார்கள், அதன் வரலாறு, உருவாக்கியவர், அதை பற்றிய அரிய குறிப்புகளுடன் இருப்பது பார்வையாளர்களின் கவனத்தைக் கவருகின்றது. 1886ஆம் வருடம் முதன்முதலில் ஜெர்மனியில் தயாரிக்கப்பட்ட பென்ஸ்கார்,

அமெரிக்காவில் முதலாகப் பொதுஜன பயன்பாட்டிற்கு விற்பனை செய்யப்பட்ட ஃபோர்டு கார் (1926ஆம் வருடம்). ஜெர்மனியில் மக்கள் பயன்பாட்டுக்கு தயாரிக்கப்பட்டு, உலக அளவில் சாதனை படைத்த ஃபோக்ஸ்வேகன் (1939), இங்கிலாந்து போரிஸ் கம்பெனி 1926ல் தயாரித்த கார். 1925ம் ஆண்டு தயாரிக்கப்பட்ட ரோல்ஸ் ராய்ஸ்

போன்ற பல கார்கள் வரிசை கட்டி நிற்கின்றன.

மேலும் 10 பேர், 6 பேர், 4 பேர், இருவர், ஒருவர் மட்டுமே பயணிக்கக் கூடிய பல்வேறு அளவுகளில் கார்களும் காட்சிப்படுத்தப்பட்டுள்ளது. 1940ல் ஜி.டி. நாயுடு உருவாக்கிய, இந்தியாவின் சிறிய கார் மாடல் வைக்கப்பட்டுள்ளது. அதற்கு அவர் உருவாக்கிய காருக்கு நிர்ணயித்த தொகை 3000/- ரூபாய். இன்றைக்கு டாடாவின் கார்க்கு காட்டிய ஆதரவு அன்றைய அரசாங்கம் ஜி.டி. நாயுவிற்கு அளித்திருந்தால், கார் உற்பத்தியில் இந்தியா ஒரு பெரிய மாற்றத்தை 60 வருடத்திற்கு முன்பே ஏற்படுத்தியிருக்க கூடும்.

மேலும், இங்கிலாந்தில் தயாரிக்கப்பட்ட மேரிஸ் மினி கார், ஜப்பானின் மாஸ்தா, நீளமான லிமோ கார், ஸ்பெயினில் தயாரிக்கப்பட்ட கிஸ்கானா சூஸ் கார், இந்தியாவின் அம்பாசிடர் கார், பிரிட்டன், ஜெர்மனி, அமெரிக்கா, பிரான்ஸ், ஸ்பெயின், ஜப்பான், இந்தியா என கார்கள் பட்டியல் நீண்டதாக உள்ளது.

தன்னிடம் உள்ள கார்களையும், பொருட்களையும் காட்சிப்படுத்த வேண்டும் என்ற நல்ல எண்ணத்தில் அவர் உருவாக்கிய அருங்காட்சியகம் இது. இவரை போன்றே கார்களில் ஈடுபாடு உடைய அவர் மகன் திரு.ஜி.டி. கோபால் மேலும் பல அரியவகை பழமையான கார்களை இந்த காண்காட்சியில் இடம்பெறச் செய்துள்ளார். இன்று தமிழ்நாட்டில் கார்களுக்கு என நிரந்தர கண்காட்சியகம் இது மட்டுமே என்று சிறப்புப் பெயர் பெற்றுள்ளது. மேலும் இதை சீரிய முறையில் பாதுகாத்துவரும் ஜி.டி.நாயுடு பேரன், திரு. ராஜ்குமார் அவர்களும் பாராட்டுக்குரியவர்கள்.

கண்காட்சியை பார்த்துவிட்டு வெளியேவரும் ஒவ்வோர் உள்ளத்திலும் இதுபோல் நாமும் ஏதாவது ஒன்று செய்ய வேண்டும் என்ற ஆர்வம் ஏற்படுத்துகிறது இந்த கண்காட்சி கூடம். அதில்தான் இதை அமைத்த ஜி.டி.நாயுடு வெற்றி பெறுகிறார்.



புராதானமான கோவில்களுக்குப் போழும்பொழுது நமக்கு மனஅமைதியோடு பெரிய பெருமிதமும் ஏற்படுகிறது.

கோவிலின் கட்டிட அமைப்பு மிக வியப்பாக இருக்கிறது. எவ்வளவு நேர்த்தியாகக் கட்டியிருக்கிறார்கள். காற்றும் சூரிய வெளிச்சமும் உள்ளே ஊடுறுவும்படியாக அமைத்திருக்கிறார்கள். பழைய கோவில்களில் கல்வெட்டுக்கள் அரிய பொக்கிஷ விஷயங்களைத் தன்னுள் கொண்டு காட்சியளிக்கிறது. நாம் அவற்றை நன்கு பராமரிக்கிறோமோ என்று கேட்டுக் கொண்டால் பதில் வேதனையாக இருக்கும்.

கலைநயத்துடன் கூடிய இக்கோவில்களைக் கட்டிய நம் மன்னர்களின் பங்கு மிகப் பெரியது. ஒவ்வொரு வம்சத்தில் வந்த மன்னர்களும், அவரவர் காலத்தில் கோவில்களைப் பெரிதுபடுத்தினர். அப்பொழுதுதான் நூறுகால், ஆயிரம் கால்கள் மண்டபங்கள் தோன்றின. ஒவ்வொரு தூணும் அழகுமிக்க, சிற்பங்களுடன் உருவாக்கப்பட்டன. ஒவ்வொரு சிற்பமும் உயிருடன் இருப்பதுபோல் தோற்றமளிக்கும்.

இவையெல்லாற்றையும் ரசித்துப் பார்க்க வேண்டும். அவசர அவசரமாகச் சென்றுவராமல், ஒவ்வொரு சிற்பத்தின் தனித்துவத்தைப் பற்றித் தெரிந்துகொள்ளக் கண்டிப்பாக நிதானமும், பொறுமையும் வேண்டும்.

வெளிநாட்டுக்கெல்லாம் சென்று அந்தச் வரலாற்றை பற்றித் தெரியாமல் நாம் அங்குள்ள அதிசயங்களைப் பார்த்து வியக்கிறோம். நமது நாட்டின் இத்தகைய அரிய பொக்கிஷங்களை நாம் அடுத்தத் தலைமுறைக்கும் எடுத்துச் செல்ல வேண்டும். அதற்கு நாம் அவைகளின் சிறப்புகளை அறிந்து கொள்ள வேண்டும். எனவே நாம் நம்முடைய நேரத்தை சிறிது இவற்றிற்கும் ஒதுக்க வேண்டும். நமது கோவில்களின் சிறப்பையும், ஆர்வத்தையும், சரித்திரத்தையும் இன்னும் பல ஆயிரம் வருடங்கள் பேசும்படியாக நாம் செய்ய வேண்டும். நமது நாட்டின் பெருமை நிலைத்து நிற்கவேண்டும்.

புதிய பல கோவில்கள் கட்டப்பட்டு வரும் இந்நாட்களில், நாம் நமது பார்வையை இத்தொன்மை மிக்க கோவில்களின் மேல் செலுத்தி அதைப் பிறரின் கவனத்துக்குக் கொண்டு வருவது சிறப்பாகும்.



மகாபலிபுரம் அருவி யானை புடைப்புச் சிற்பம்

# கொற்றவை

## அன்புமணி





பொதுவாக மலை ஏற்றங்களில் அதிகம் கவனம் செலுத்துவர்களில் நானும் ஒருவன் பலமுறை சேலம் மாவட்டம் மேச்சேரியில் இருந்து தொப்பூர் செல்லும் சாலையில் உள்ள மலைகளில் பல முறை ஏறி உள்ளேன் ஆனால் என்னுடைய கண்ணில் படாத ஒரு பொக்கிஷம் நான்கு சுவர் இடையில் அடைபட்டுக் கிடந்தது அதுவும் என்னுடைய கண்ணில் பட்டது யதார்த்தமாக தான் அரை நிலையில் உடைந்துபோன ஒரு கல்வெட்டை காரின் சக்கரத்துக்கு வைத்திருந்தார்கள் இரவு சமயம் என்பதால் என்னால் தெளிவாக பார்க்க முடியவில்லை காலையில் சென்று வேகவேகமாக பார்த்தேன்.

இறுதியாக தான் தெரிந்தது அது கொற்றவை என்று நானும் புகைப்படம் எடுத்து பல வரலாற்று ஆய்வாளர்களுக்கு அனுப்பினேன் அவர்கள் சொல்வது வைத்து தெரிந்துகொண்டேன் இது மிகவும் பழமையான கொற்றவை என்று. வீரராகவன் ஐயா அவர்கள் இந்த கொற்றவையின் படத்தை பார்த்துவிட்டு பத்தாவது நூற்றாண்டாக இருக்கலாம் என்று (கணித்துள்ளார்) இன்னும் ஆராயப்படவில்லை.

மற்ற கொற்றவையில் இல்லாத வண்ணம் இதில் வில் அம்பு ஈட்டி அதுமட்டுமல்லாமல் பாம்பு போன்ற ஒரு அமைப்பு கருடன் மனித ரூபத்தில் இருப்பது போல சிங்கம் கர்ஜித்து கொண்டிருப்பது போல இவையெல்லாம் கொற்றவையின் வலது மற்றும் இடது புறமாக காணப்படுகிறது கொற்றவையின் பின்புறமும் மேற்புறமும் கல்வெட்டானது காணப்படுகிறது

இது இன்னும் பதிவு செய்யப்படவில்லை ஆவணங்களில் என்பது குறிப்பிடத்தக்கது காரணம் இதன் பகுதி மக்கள் கொற்றவையை காளியம்மன் கோவில் ஆக நினைத்து வழிபாடு செய்கிறார்கள் அதுமட்டுமல்லாமல் கொற்றவை சுற்றி சுவர் எழுப்பி உள்ளதால் அவ்வளவு எளிதாக பார்க்க முடிவதில்லை கொற்றவை சுற்றி இன்னும் துணிகளை சுற்றி இருப்பதால் பார்ப்பது மிகவும் பெரும்பாடு அதாவது எளிதாக அடையாளம் காண முடியாது இதனைப் பார்க்க விருப்பம் உள்ளவர்கள் தாராளமாக என்னை தொடர்பு கொள்ளுங்கள்.

கொற்றவை பற்றி பல எண்ணிலடங்காத தகவல்களை நாம் கூகுள் வலைத் தளங்களில் காணலாம் அதாவது கொற்றவை பாலை கள்வர்களின் தெய்வமாக தாய்வழிபாடு இருந்தது. வேட்டை சமூக வழக்கமாக இருந்ததன் தொடர்ச்சியாக வேட்டைக்கு போகும் முன் மூத்த தாயிடம் வேட்டைக்கு போய் வருகிறோம் குழந்தைகளை காப்பாற்றும் பொறுப்பு ஒப்படைத்து செல்வர் வேட்டைமுடிந்து வந்து இறைச்சியை உண்பர்

அதன். தொடர்ச்சிகள் வரியிலும் தொடர்ந்தது கிடா வெட்டி வழிபடல் அதன் தாக்கமே அந்த கள்வர்களை கட்டுப்படுத்தும் அரசவீரர்களும் கொற்றவையை வழிபட்டனர் வெற்றி பெற்று திரும்பியது ஊன் சோறு படையலிட்டனர்



# பாதங்கள் பதியாத பாதை

## இராசு. சரவணன் ராஜா, வேலூர்

"கல் தோன்றி மண் தோன்றாக் காலத்தே வாளொடு முன் தோன்றிய மூத்தகுடி" என்று தமிழரின் பழமையைக் குறித்து வெண்பாமாலை செய்யுள் தெரிவிக்கும் இக்கருத்துக்கு வலுசேர்க்கும் வகையிலான, பல ஆயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட பாறை ஓவியங்கள், நடுகற்கள், கல்வெட்டுகள், சிற்பங்கள், ஆலயங்கள் உள்ளிட்ட தொல்பழங்காலச் சின்னங்களைக் கொண்ட பழமையும், பெருமையும் மிக்கது வடஆற்காடு எனப்படும் வேலூர் மாவட்டம்.

தொண்டை நாடு என அழைக்கப்பட்ட வேலூர் மாவட்டப் பகுதிகள் பல்லவர்கள், சோழர்கள், சம்புவராயர்கள், முகலாயர்கள், விஜயநகர நாயக்கர்கள், பிஜப்பூர் சுல்தான்கள், மராட்டியர்கள், நவாப்புகள் மற்றும் பிரிட்டிஷ் அரசுகளின் ஆளுகையிலிருந்துள்ளது.

இவர்கள் காலத்தில் அமைத்த பல்வேறு ஆலயங்கள், வரலாற்றுச் சின்னங்கள் மாவட்டம் முழுவதும் காணக்கிடைக்கிறது. பல சின்னங்கள் அழிவுற்ற நிலையிலும், மிகச் சில இன்றும் கம்பீரமாகப் பழமை மாறாமலும், சில சிறிய கிராமங்களில் பலர் பார்வையில் படாமலும் இருக்கின்றன. பிரபலமான ஆலயங்களுக்கு மட்டும் பக்தர்களும் சுற்றுலாப் பயணிகளும் செல்லுகிறார்கள். ஒரு காலத்தில் மிகச் சிறப்பாக இருந்த இவ்வாலயங்கள் இன்றைய நிலையில் மூலையில் முடங்கிக் கிடக்கும். பல ஆலயங்களின் வரலாற்று அடையாளங்கள் பெரும்பாலும் மறக்கப்பட்டுவிடுகின்றன.

இதோ ஆயிரம் வருடங்களுக்கு முன்பு நம் முன்னோர்கள் சிறப்பாக வாழ்ந்ததற்கு அடையாளமாய் ஒரு மரகத கல்லாலான ஆலயம், தமிழ் இனத்தால் கட்டப்பட்ட சோழர் குலத்தின் அடையாள சின்னம். வேலூரிலிருந்து 27 கி.மீ. தொலைவிலும், பாடல் பெற்ற தலமான வள்ளிமலை அடுத்து 6 கி.மீ. தொலைவில் "மேல்பாடி" என்ற அழகிய கிராமத்தில், பசுமையான வயல்களுக்கு மத்தியில் இரண்டு தனித்தனிக் கோயில்களாக, பொன்னை ஆற்றங்கரையோரம் சோழர்காலக் கட்டிடக் கலைக்கும், சிற்ப திறனுக்கும் எடுத்துக்காட்டாக அமைந்துள்ளது. காலம் மறந்துவிட்ட இந்தச் சிறிய கிராமத்தில் தன்னுடைய தாத்தாவிற்காக (அரிஞ்சயன்) அவர் பேரன் (இராஜராஜன்) ஓர் அழகிய பள்ளிப்படை


மேல்பாடி ராஜராஜன் கல்வெட்டுகள்

நினைவாலயம் எடுப்பித்தான் என்ற செய்தி நம்மில் எத்தனை பேர் அறிவார்கள்?

போரில் வீர மரணம் அடைந்த வீரர்களுக்கு நினைவுச் சின்னங்கள் நிறுவப்பட்டு ஒரு "நடுகல்" நடப்பட்ட வழக்கம் முதலாம் நூற்றாண்டிலேயே தமிழகத்தில் வழக்கத்தில் இருந்திருக்கின்றது. அரசர்கள் புதைக்கப்பட்ட இடங்களின் மீது சிவன் கோயில்கள் அரசர்களின் விருப்பப்படி அமைக்கப்பட்டது. கல்வெட்டுகளையும், சோழர்காலச் செப்பேடுகளின் அடிப்படையில் காணும் போதும் "ஆற்றூர் துஞ்சிய தேவர்க்கு எடுப்பித்த பள்ளிபடை" என்ற கல்வெட்டினை ஆதாரமாகக் கொண்டும், இக்கோயில் அமைக்கப்பட்டது என உறுதி செய்யப்பட்டுள்ளன. இவை பள்ளிப்படை கோயில்கள் என்று அழைக்கப்பட்டன. மேலும் அரிஞ்சயன் "ஆற்றூர் துஞ்சிய பெருமான்" என்று ஆனை மங்கலச் செப்பேடுகளில் புகழப்படுவார். "துஞ்சினார்" என்றால் இறந்தார் என்ற பொருள்படும் மங்கள வழக்குச்சொல் என்பது தொல்காப்பியம், புறநானூறு போன்ற தமிழ இலக்கியங்களில் வழக்குச் சொல்லாக வருவதைக் காணலாம்.

ஆயிரத்து நூறு வருடங்கள் பின்னோக்கிய சோழர் சரித்திரத்தில் முதலாம் பராந்தகச் சோழன் (கி. பி. 907-953) தஞ்சை மாநகரில் முடிசூடப்படுகிறார். இவர் ஆட்சியை ஏற்றுக் கொண்ட காலத்தில் வடக்கேயுள்ள திருக்காளத்தி வரையில் தொண்டை மண்டலம் முழுவதும் இவர் ஆட்சிக்கு உட்பட்டது. வடபகுதியில் அப்பால் அரசாண்டவர் இராஷ்டிரக்கூட மரபினர் மூன்றாம் கிருஷ்ணன். இப்போதைய தக்கோலம், பொன்னை போன்ற பகுதிகள் இரு நாட்டின் எல்லை பகுதிகளாக இருந்துள்ளனர். இங்கே பலபோர்கள் நடைபெற்றிருக்கின்றன. இராட்டிரகூடர்களுக்கும் சோழர்களுக்கும் கி.பி. 949ல் இன்றைய அரக்கோணத்திற்குத் தென்கிழக்கில் உள்ள தக்கோலத்தில் நடைபெற்ற போர் சரித்திரப் பிரசித்தி பெற்றது. தமிழக வரலாற்றில் திருப்பு முனையான இப்போரில், மூன்றாம் கிருஷ்ணனின் மைத்துனனும், கங்க அரசனானுமான இரண்டாம் பூதுகன், யானை மீதிருந்து போர் புரிந்த முதல் பராந்தக சோழனின் மூத்த மகனும், பட்டத்து இளவரசனுமான இராசாதித்தன் மீது அம்பெய்தி கொன்றான். போரில் வென்ற மூன்றாம் கிருஷ்ணன் தன் மைத்துனர்க்கும், உதவிய சிற்றரசுகளுக்கும் வென்ற தொண்டை நாட்டு பகுதிகளைப் பங்கிட்டுத் தந்து பெருமைப்படுத்திய சாசன கல்வெட்டு இன்றும் வேலூர் வேலப்பாடி பகவதிமலை குகையில் காணப்படுகின்றது.

இராசாதித்தன் யானை மீது துஞ்சிய தேவன் எனச் சோழர்காலச் செப்பேடுகளில் புகழப்படுகிறார். இவர் தம்பியான கண்டராதித்தன் (கி.பி. 949-956) முதலாம் பராந்தகனுக்குப் பிறகு சோழ அரசராகப் பட்டம் பெற்றார். இவர் மறைவுக்குப் பின் இவர் மகன் உத்தம சோழன் என்ற மதுராந்தகன் குழந்தையாக இருந்ததால், கண்டராதித்தன் தம்பியான அரிஞ்சயன் சோழ மண்டலத்து அரசரானார். (கி. பி. 956-957) இவருக்கு அரிந்தமன், அரிகுலகேசரி



என வேறு பட்டப் பெயர்களும் உண்டு. இவர் சோழநாட்டின் சக்கரவர்த்தியாக முடிசூடிய பிறகு தன் தந்தையாட்சியின் இறுதியில் இராட்டிரகூட மன்னன் கவர்ந்து கொண்ட தொண்டை நாட்டைத் திரும்பக் கைப்பற்றும் முயற்சியில் நடைபெற்ற போரில் வேலூர் அருகே உள்ள ஆற்றூரில் உயிர் துறந்துள்ளார். இவருக்குப் பிறகு பட்டத்துக்கு வந்த இவர் மகன் சுந்தரசோழன் எனப்படும் இரண்டாம் பராந்தகனின் இரண்டாவது புதல்வனே அருள்மொழி என்ற இராஜராஜ சோழன்.

இரண்டாம் பராந்தகனுக்குப் பிறகு மீண்டும் கண்டராதித்தன் மகன் மதுராந்தகன் (கி.பி. 969-985) ஆட்சி ஏற விரும்பியதால் தன் சிற்றப்பாவான மதுராந்தகனையே அரசனாக்கி, தான் அவருக்கு அடங்கிய இளவரசனாக இருந்து நாட்டைப் போர்முனையில் கவனித்து வந்தார். இவரது பெருமுயற்சியாலேயே தொண்டை மண்டலம் முழுவதும் மீட்கப்பட்டது. மதுராந்தகனின் இயற்கை மறைவுக்குப் பின்னரே இராஜராஜன் சோழ நாட்டின் ஆட்சிப் பொறுப்பை ஏற்றார் (கி.பி. 985-1014). தமிழகம் மற்றும் இலங்கை, இந்தோனேஷியா, ஜாவா, சுமத்திரா, பர்மா, நிக்கோபார், லட்சத்தீவுகள் முழுவதையும் ஒரே குடையின் கீழ் 10-ம் நூற்றாண்டில் ஆட்சி செய்து, தென்னிந்தியாவின் தன்னிகரற்ற பேரரசனாக, சமயமும் கலையும் இரு கண்ணென விளங்கிய மும்முடி சோழன், சிவபாத சேகரன் என்றெல்லாம் அழைக்கப்பெற்ற முதலாம் இராஜராஜ சோழன், சோழ நாட்டை விரிவாக்கி பேரரசாக நிலைபெறச் செய்தார். இவர் உண்டாக்கிய அரசு ஏறக்குறைய இரண்டு நூற்றாண்டுகள் நிலையுற்றிருந்தது எனில் இவர் இட்ட அடிப்படை எத்தகைய உறுதி வாய்ந்ததாக இருந்திருக்க வேண்டும். உலகமே இன்றும் வியக்கும் தஞ்சை பெரிய கோவிலை 6 ஆண்டில் கட்டி எழுப்பியவர்.

சோழ ராஜ்ஜியம் ஏற்படக் காரணமான தன் பாட்டனார் அரிஞ்செய சோழனுக்கு, ஒர் அழகிய பள்ளிப்படை நினைவாலயத்தைக் கட்டியிருக்கிறார். அன்றைய சோழர் காலத்தில் சோழேந்திர சிம்மேஸ்வரம், அரிஞ்சிகை ஈஸ்வரம் என்று அழைக்கப்பட்ட இந்தக் கிராமத்தின் இப்போதைய பெயர் மேல்பாடி. புராதனமான இவ்வாலயம் தொல்பொருள் துறை கட்டுப்பாட்டில் உள்ளதால் வேலியிட்டுத் தூய்மையாக காணப்படுகின்றது. கோவில் முழுவதும் சோழர்காலக் கற்றளி அமைப்பு. ஆயிரக்கணக்கான ஆண்டுகள் வரை நிலைத்திருந்து அருள்பாலிக்க வேண்டும் என்ற நோக்கத்தோடு, 25 கி.மீ. தொலைவில் உள்ள கஞ்சன மலையில் உள்ள விசேஷ மரகத கருங்கற்கைக் கொண்டு நுட்பமான தொழில் நுணுக்கங்களோடு, ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்பே உருவாக்கப்பட்டு, இன்றும் தன் கம்பீரத் தன்மையை இழக்காமல் பொலிவும், வலிமையுமாகத் திகழ்கிறது. விமானம் முழுவதும் கலசம் உட்படப் பச்சை கற்களால் கட்டப் பெற்றிருக்கின்றது. சதுர வடிவில் உள்ள கோயில் சிறியதுதான் மேற்குப்புறமாக உள்ள வாசலில் ஆறு படிகள் ஏறி சென்றால், உள்ளே எளிமையான பிரகாரம். அதை கடந்து சென்றால் 10 x 10 அளவில் கருவறை, உள்ளே அழகிய 2 அடி

உயர லிங்கம் காணப்படுகின்றது. கருவறையின் உள்ளே அமைப்பு எளிமையாகக் கற்றளி வடிவில் காணப்படுகின்றது. வாசல் வெளியே உள்ள சூரிய வெளிச்சம் லிங்கம் மேல் படர்ந்து அந்த இடம் வெளிச்சமாகக் காணப்படுகின்றது. கருவறை வாயிலுக்கு இருபுறமும் 6 அடி உயரத் துவார பாலகர்கள் கம்பீரமாக காட்சிதருகின்றனர். இறைவனைத் தரிசனம் செய்ய வருபவர்கள் தங்களையும் ஒரு கணம் வியப்போடு காணும் வகையில் கலைச் சிறப்புக் கொண்ட சிலைகள் அவை. அதில் ஒரு துவாரபாலகரின் காதுகளில் தொங்கும் குண்டலங்கள் வழியே நுழைந்து தலையை வெளியே நீட்டிக் கொண்டிருக்கும் சிறிய யாளி (யாளி-யானையின் துதிக்கையுடன் கூடிய சிங்க உருவத்திலான புராண கற்பனை மிருகம்) குறிப்பிடத்தகவை. கடினமான கல்லில் அற்புதமாக அந்தக் காலச் சிற்பிகள் வடித்த கற்பனை திறனை என்னால் வார்த்தைகளில்கூட வடிக்க இயலவில்லை.

ஓர் அடி உயரச் சிறிய நந்திசிலை கருவறை எதிரே உள்ளது. கருவறை முழுவதும் சுற்றிவரப் பிரகாரம் அமைந்துள்ளது. திருச்சுற்றில் உள்ள கோஷ்டங்களில் பிரமிக்கத்தக்க அளவில் கலையழகு மிளிரும் விஷ்ணு, பிரம்மா, தட்சிணாமூர்த்தி, விஷ்ணுதுர்கை உருவங்கள் மரகதக் கற்களால் இழைத்திருக்கிறார்கள். பச்சைவண்ண கற்கள் மிளிர்கின்றன. ஒவ்வொரு சிற்பமும் கை, கால்கள் மடங்கியிருப்பது தத்ரூபமாக இருக்கின்றன. மூர்த்திகளின் மாடத்துக்கு மேல் அற்புதமாக தெய்வ வடிவங்களை வடித்திருக்கிறார்கள். சில சிற்பங்கள் சிதைந்திருந்தாலும் அவற்றில் உள்ள நுண்ணிய வேலைப்பாடுகள் காலவெள்ளத்தால் அழிக்க முடியாத கலைப் பெட்டகங்களாகக் காட்சியளிக்கின்றன. கோயில் கதவுகள் மூடியே இருப்பதால் மற்ற சிலைகள் பாதுகாப்பாக உள்ளதோ என்று தோன்றுகின்றது.

கருவறையின் வலதுபுற சுவற்றில், வரிசை வரிசையாகச் சுவர் முழுவதும் ஆச்சரியங்களை அடுக்கடுக்காய்க் கொண்ட கல்வெட்டுச் செய்திகள், கோயிலுக்கு அளிக்கப்பட்ட சில நன்கொடைகள் பற்றிக் குறிப்பிடுகின்றன. இயற்கை ஏற்படுத்தும் அழிவுகளிலிருந்தும், புதுப்பித்தல் என்று மனிதர்கள் ஏற்படுத்தும் அழிவுகளிலிருந்தும் இந்தக் கல்வெட்டுச் செய்திகள் காப்பாற்றப்பட்டுள்ளன. ஒரு கல்வெட்டு முழுவதும் வட்டெழுத்து மற்றும் கிரந்த எழுத்துகள் வடிக்கப்பட்டுள்ளன. மற்றொரு கட்வெட்டில் முதலாம் இராஜராஜன் காலத்திய அழகான தமிழ் எழுத்துக்களைப் பார்க்கவும் படிக்கவும் முடிகின்றது. கல்வெட்டு என்றாலே புரியாத ஒன்று என ஒதுங்குவோம். இந்தக் கல்வெட்டுகளைப் படிக்கும்போதே இதன் மீது ஆர்வம் கொண்டு மேலும் அறியவேண்டும் என்ற வரலாற்றுணர்வைத் தூண்டுவது குறிப்பிடத்தக்கது.

16 வரிகள் கொண்ட அந்த இராஜராஜன் கல்வெட்டு செய்தி :
முதல் வரியில் : ஸ்வஸ்தி ஸ்ரீ திருமகள் பெருநிலச்... என தொடங்கி
ஆற்றூர் துஞ்சிய தேவர்க்குப் பள்ளிப்படையாக உடையார் ஸ்ரீ ராஜ ராஜ தேவர் எங்கள் நகரத்தி வெடுப்பித் தருளின திரு அறிஞ்சிகை ஈஸ்வரத்து மாதேவர்கோயிலுக்... கென முடிக்கப்பட்டுள்ளது.

இதில் கவனிக்கத்தக்க விஷயம், இவ்வளவு அழகிய ஆலயத்தை எழுப்பியுள்ள இராஜராஜன், அங்கே தனக்கென்று ஒரு சிலை எழுப்பிக் கொள்ளவில்லை. அந்த கல்வெட்டைக்கூட, எல்லோரும் பார்க்கும்படியாக, முகப்பில் கொண்டுவந்து வைக்கவில்லை. பக்கச் சுவரில், அடக்கமாக வெளிப்படுத்தியுள்ளார். அதனால்தான் 1100 வருடங்கள் கடந்தும் அவர் நினைக்கப்படுகிறார் என்று செல்லாமல் சொல்கின்றது அந்த கல்வெட்டுச் செய்தி.

ஒவ்வொரு ஆலயமும் காலத்தின் கைகளில் எத்தனையோ துன்பங்கள் எதிர்கொண்ட போதும், மன்னர்களும், மக்களின் அரவணைப்பில் தப்பிப் பிழைத்து நம் தலைமுறைக்கு வரலாற்றைச் சொல்ல வாழ்ந்து கொண்டிருக்கின்றன. இவை வாழந்தால்தான் நம் வரலாறும் வாழும். ஆள் அரவமின்றி, ஜன நெரிசலும் இல்லாது அளவான மக்கள் கூடும் அழகான இக்கலைக் கோயிலை வாழ்வில் ஒரு முறையேனும் நிச்சயம் கண்டுவிட வேண்டும். மீண்டும் மறுமுறை பார்க்கத் தூண்டும் இந்தக் கலைப் பெட்டகம் நம் அருகில்தான் உள்ளது. இதைக் காண்பவர்கள் இறையருள் பெற்ற அதிர்ஷ்டசாலிகள் என்பேன்.

எழுத்து, புகைப்படம் : இரா. சரவணன் ராஜா





# கத்திரிமலை

## A.T மோகன், சேலம்

புகைப்படங்கள் சண்முகம் கோவிந்தபாடி

கத்திரி மலை ஏற கிளம்பும் போது கிளப் உறுப்பினர்கள் அனைவரும் ஆபிசர் கணக்காதான் கிளம்பினாங்க. ஆனால் மலை ஏறி முடியும் போது நீட் பரிச்சை எழுதிட்டு வந்தவங்க மாதிரித்தான் இருந்தாங்க. சேலம் மேட்டூரை அடுத்தக் கத்திரிமலை, கடல் மட்டத்திலிருந்து 5000 அடி உயரத்தில் இருக்கும் மலை அது.

உள்ளூர் நண்பர்கள் துணையின்றிச் செல்வது உசிதமானது அல்ல என எண்ணி எங்கள் குழுவினருக்கு மிகவும் உதவியாக இருந்த இந்தப் பயணம் பாதுகாப்பானதாக இருக்க உதவியாக இருந்தது திரு. சண்முகம், அவரது தந்தை மற்றும் அவரது மச்சான் உதவியுடன் சென்றோம்.

இவர்களுக்கு முதலில் நன்றியை சொல்லியும், இவ்வளவு அருமையான புகைப்படங்கள் எடுத்த *Photo Walker's club* நண்பர்கள் அனைவருக்கும் நன்றியை சொல்லிக்கொண்டு இந்தக் கட்டுரையைத் தொடங்குகிறேன்.

"இதோ கொஞ்ச தூரம்" என்று சொல்லித்தான் அழைத்துப் போனார்கள்.













மேட்டூரிலிருந்து அதிகாலையில் அந்த மலையடிவாரத்தில் இறங்கியதுமே வேறொரு உலகிற்கு வந்துவிட்டோமோ என்றுதான் தோன்றியது.

"அதோ அதுதான் கத்திரி மலை... பக்கம்தான்... போய்விடலாம்" என்று சொல்லிக் கொண்டே கையை உயர்த்தி வான் நோக்கிக் காட்டினார்கள் வழிகாட்டுவதற்காக எங்களுடன் வந்திருந்த மலைவாழ் இளைஞர்கள்.

தலை நிமிர்ந்து மலையைப் பார்த்தபோது, ஏறி விட முடியுமா? என்கிற மலைப்புதான் கண்முன் நின்றது. வெட்கப்பட்டுப் பச்சையைப் போர்த்திக்கொண்டு நிற்கும் மரங்கள் காற்றில் அசைந்து கொண்டிருந்தது, எங்களை வரவேற்று அழைப்பதுபோல் இருந்தது. உருட்டிவிடப்பட்ட கற்களும் அவற்றைத் தாண்டி நிற்கும் மணல் வெளியும் எங்களுக்கான பாதைகளாகின. 15 கிலோ மீட்டர் நடந்தால்தான் அந்தக் கத்திரி மலைக்குப் போக முடியும். செங்குத்தான மலைப் பகுதி. பாதையை உருவாக்கியவர்கள் கத்திரி மலையில் வசிக்கும்

பழங்குடியின மக்களான சோளகர்கள். கன்னடம் பேசினாலும் இவர்களின் தாய்மொழி தமிழ்தான். மலையும் மலை சார்ந்த குறிஞ்சி நிலத்தின் மண்ணின் மைந்தர்கள்.



சமதளத்தைக் கடந்து மலை ஏறஏற மரங்களைக் கிழித்துக் கொண்டு வீசும் காற்றைப் போல மேல் மூச்சுக் கீழ் மூச்சு வாங்கியது. சமதளத்தில் எத்தனை கிலோ மீட்டரானாலும் நடக்க முடியும். ஆனால், சமமற்ற செங்குத்தான மலைப் பகுதியில் நடப்பதற்குப் பயிற்சி வேண்டும் என்பதை 26-05-2017 அன்றுதான் உணர்ந்தோம்.

"வந்துவிட்டோமா... இன்னும் எவ்வளவு தூரம்" என்கிற வார்த்தைகள் மூச்சு வாங்க வாங்க அவ்வப்போது எங்களிடமிருந்து வந்துகொண்டுதான் இருந்தன.

சூரியன் நுழைய முடியாத அந்த அடர்த்தியான காட்டுக்குள் நடப்பது என்பதே சுகமாகத்தான் இருந்தது. ஆங்காங்கே மரங்களின் நிழலுக்குக் கீழே கிடக்கும் பெரும் பாறைகள் இருந்தன. எங்களுக்காக காத்திருந்ததுபோல் கிடந்த அந்தப் பாறைகளில் அனைவரும் அமர்ந்து சிறிது நேரம் இளைப்பாறிவிட்டுத்தான் போக முடிந்தது. கொண்டுபோன தண்ணீர் பாட்டில்கள் தீர்ந்தாலும் எங்களுக்காக மலை உச்சியிலிருந்து மூலிகைத் தண்ணீர் கொட்டிக்கொண்டிருந்தது. அந்த தண்ணீரைக் குடிக்கக் குடிக்க அவ்வளவு சுவை. குடித்த பின்னர்தான் புதிய 'எனர்ஜி' கிடைத்தது. களைப்பு தீர்ந்தது. மீண்டும் நடைப்பயணம்.

கத்திரி மலை மக்களைப் பார்த்த பிறகுதான் நிம்மதி வந்தது. போனதும் சோளகர்கள் கொடுத்த அந்தக் கூட்டாஞ் சோற்றை உண்டோம். அமிர்தத்தையும் மிஞ்சும் உணவாக இருந்தது. நவநாகரீக மாந்தர்களே வெட்கப்படும் அளவுக்கு உபசரிப்பு கத்திரி மலை மக்களிடம் இருந்தது. அப்படி அம்மக்கள் முன்பின் தெரியாத எங்களை மிக வாஞ்சையாக வரவேற்றார்கள். லேசான மலைச் சாரல் கத்திரி மலையைத் தழுவியது. கேழ்வரகுப் பயிறும் ஊடுபயிரான அவரையும் பச்சைப் பசேல் எனக் குலுங்கின. புளிய மரங்களும் வில்வ மரங்களும் காய்களைச் சுமக்க முடியாமல் விழிபிதுங்கின. வீடுகளெல்லாம் மாட்டுச் சாணங்களைப் பூசிக்கொண்டு மினுமினுத்துக் கொண்டிருந்தன. மண்ணைப் பிசைந்து கட்டப்பட்ட மண் வீட்டைத் தென்னை ஓலைகளும் நாணல்களும் கிரீடங்களாய் அலங்கரித்துக் கொண்டிருந்தன. பத்துக்குப் பத்து அளவுக்கும் குறைவான அளவு கொண்ட வீடுகள்தான். அந்த ஊருக்கான மின்சாரத்தைத் தர 20 சோலார் கம்பங்கள் சூரியனுக்காகக் காத்திருந்தன. மொத்தமே 70 வீடுகளை கொண்டதுதான் அந்த மலைக்கிராமம். மின்சாரத்தைப் பார்க்கவில்லை, பாழாய்ப் போன டி.வி. பெட்டியையும் பார்க்கவில்லை. அங்கே ஒரே ஒரு ஆறுதல் சினிமாக்காரர்களின் அடையாளமே இல்லை.

ரசிகர் மன்றங்களே இல்லாத கிராமங்களில்லை. ஆனால் கத்திரி மலையில் மட்டும் ரசிகர் மன்றங்களுக்குக் கத்திரி போட்டுவிட்டார்கள் போலும். அம்மக்களுக்கான தாகத்தைத் தீர்த்துக் கொண்டேயிருக்கும் மணிமேகலையின் பாத்திரமாய்க் காட்சியளிக்கும் ஊரின் ஒரே கிணறு வந்திருந்த மக்களுக்கும் நீரை வாரி இரைத்துக்கொண்டே இருந்தது. இரவு அங்கே தங்கி அந்த மக்களின் உபசரிப்பை ஏற்றுக் காலையில் மலையை விட்டு இறங்கும் போது மனதை என்னவோ செய்தது.

# நாடார் சமுதாய மக்கள் வரலாற்றின் மாறுபட்ட பக்கங்கள்

## படுவாசி ரகுநாத், மதுரை

"நாடார் வரலாறு கறுப்பா? காவியா?" நூல்கள் பெரும்பாலும் வெளி வந்த பிறகு விவாதத்திற்கு உள்ளாகும். மாதொருபாகன் போன்ற நூல்கள் வெளிவந்த சில ஆண்டுகள் கழித்தே பிரச்சனைகளுக்கு உள்ளானது. வரலாற்றை நிருவக் கூடிய ஆய்வு நூல்களின் பக்கம் பொதுசமூகம் சமீபகாலமாகத்தான் திரும்பியுள்ளது. அதற்கு மத்தியில் ஆளும் அரசுக்குதான் நன்றி சொல்லியாக வேண்டும். அவர்கள் பரப்பக் கூடிய ஒவ்வொரு வரலாற்று திரிபுக்கும் மெய்யான விளக்கத்தை களத்தில் உள்ள ஆய்வாளர்களின் மூலம் அறிய உடனே அவர்களது முகநூல் பக்கங்களில் வந்து உட்கார்ந்துவிடுகின்றனர் இன்றைய இளையதலைமுறையினர்.

அப்படியாக ஒரு பெரும் வரவேற்ப்பை ஆளும் வர்கம், "நாடார் வரலாறு கறுப்பா? காவியா?" எனும் வரலாற்று ஆய்வு நூலுக்கு வெளியாகும் முன்பே பெற்றுத்தந்துள்ளது. வழக்கறிஞர் தி.லஜபதிராய் அவர்களது பல ஆண்டுகால கள ஆய்வினில் விளைந்துள்ளது இந்நூல். மார்ச் 8-ஆம் தேதி மதுரை உலகத் தமிழ்ச்சங்க வளாகத்தில் நூல்வெளியீடு திட்டமிடப்பட்டது. நூல்வெளியீட்டு விழாவிற்கான வேலைகள் நிகழ்ந்து கொண்டிருக்கும் போதே மார்ச் 6-ஆம் தேதி உலகத் தமிழ்ச்சங்க இயக்குநரிடம் இருந்து நிகழ்ச்சி நடத்துவதற்கான அனுமதி மறுக்கப்பட்டு, தகவல் வந்தது. அதற்கு அவர்கள் கூறியிருந்த காரணம், அரசுக்கு எதிர்மறையாக உள்ள சிறப்பு விருந்தினர்கள் கலந்துகொள்ள இருப்பதாலும், சாதி மத தொடர்பிலா நிகழ்வு போன்று இருப்பதாலும், இந்நிகழ்ச்சியை நடத்த அனுமதிக்க இயலவில்லை.




என்பதாகும்.

மார்ச் 7-ஆம் தேதி நீதிபதி திரு.ஜி.ஆர்.சாமிநாதன் அவர்களிள், உலகத் தமிழ்சங்க வளாகத்தின் அனுமதி மறுப்பு உத்தரவை ரத்து செய்தார்.

நூல்வெளியீட்டு தினமான மார்ச் 8-ஆம் தேதி பொதுநல வழக்கொன்றின் மூலமாக அரசு இயந்திரம் மறைமுகமாக நெருக்கடி கொடுத்தது. இது பொதுவெளியெங்கும் பரவலாக நூல் பற்றிய தீயை பற்றவைத்துவிட்டது. தனி நீதிபதிகள் மூலமாக மதியமே போராடி நூல் வெளியீட்டுக்கான தடையை உடைத்து எறிந்தது வழக்கறிஞர்களின் வாதம்.

பெரும் சட்ட போராட்டத்திற்கு பிறகு "நாடார் வரலாறு கறுப்பா? காவியா?" நூல் வெளியீடு அன்று (மார்ச் 8, 2019) மாலை ஆயத்தமாகியது. நூலுக்கான விளம்பரத்தை அரசு இயந்திரம் ஏற்கனவே செய்துவிட்டபடியால் நூல் வெளியீடு குறித்த சுவரொட்டி விளம்பரங்களை அங்கே வந்த பிறகே மக்கள் பெரும்பாலானோர் கண்டனர். பெரும் மக்கள் திரள் அரங்கை திக்குமுக்காடச் செய்து கொண்டிருந்தது. பறை இசை ஒலிக்க, நிகழ்ச்சி துவங்கியது.

முன்னாள் தமிழக அமைச்சர் பூங்கோதை ஆலடி அருணா அவர்கள் நூலை வெளியிட திரு.சம்பத் சீனிவாசன் அவர்கள் பெற்றுக் கொண்டார். வழக்கறிஞர் ராஜசேகர் அவர்கள் அனைவரையும் வரவேற்று நிகழ்ச்சியை நெறிப்படுத்தினார். பூங்கோதை ஆலடி அருணா அவர்கள் பேசிய போது, "நாடார்களின் வரலாறு கருப்பும் சிவப்பும்தானே ஒழிய நிச்சயமாக காவியல்ல" எனப் பேசினார். அவரைத்தொடர்ந்து பேசிய சம்பத் சீனிவாசன் அவர்கள் நூலுக்குள் இருந்த கட்டுரைகளையும் அதனை ஆவணப்படுத்தியுள்ளதன் முக்கியத்துவத்தையும் பற்றி பேசினார்.

அணுசக்திக்கு எதிரான மக்கள் இயக்கத்தின் நிறுவனர். சுப.உதயகுமார் அவர்கள் பேசுகிற போது, நாடார் வரலாறு எனும் நூல் வெளியீட்டுக்கு வருகை தந்துள்ளதால் இதை ஒரு நாடார் சாதிக்கான கூட்டமாகவும் இங்குள்ளவர்கள் அனைவரையும் அந்த சாதிக்கானபெருமை பேசுவோராகவும் மட்டுமே பொதுப்புத்தியில் பலர் சமூக வலைதளங்களில் எழுதி வருகின்றனர்" என கூறினார். "ஆனால் நாடர்களின் வரலாறு சாதியத்திற்கு எதிராகவும் சனாதனா பார்ப்பனிய மதத்திற்கு எதிராகவும் நிகழ்த்திய போராட்டங்களை உள்ளடக்கியது. தோல் சீலை போராட்டம், தாலியருத்தான் சந்தை நிகழ்வுகளை திருநெல்வேலி நாகர்கோயில் மக்கள் நன்கு அறிவர்." என கூறினார்.

அவரைத் தொடர்ந்து பேசிய இயக்குநர் கரு.பழனியப்பன் அவர்கள், "நாடார் வரலாறு என்பது நாடார்களுடைய வரலாறு மட்டுமல்ல, பார்ப்பனியத்தை தவிர இங்குள்ள ஏனைய ஒவ்வொரு சாதிகளுக்கும் இப்படியான வராலறுகளே உண்டு. அதைவிடுத்து ஆண்ட பரம்பரை கதை பேசி



வரலாற்றை மறைக்கவும் மறக்கவும் செய்வதை பதிவு செய்தார். பொன்ராதா கிருஷ்ணன் அவர்கள் ஒருபோதும் எச்.ராஜாவாக ஆக முடியாது. அதே போல நமது அக்கா தமிழிசை அவர்கள் ஒருபோதும் நிர்மலா சீதாராமனாகவும் ஆக முடியாது" எனப் பேசினார்.

பேராசிரியர் அ.மார்க்ஸ் அவர்கள் பேசும் போது, "இந்நூல் ஒரு சாதிக்குமட்டுமான நூல் அல்ல, மற்ற சாதிகளின் வரலாறுகளையும் உள்ளடக்கியதே" என விவரித்தார்.

அதிகமான பேர் கலந்துகொண்ட நூல் வெளியீட்டு விழாவில் கலந்து கொள்வதில் பெருமைப்படுவதாக இயக்குநர் அமீர் பேசினார். ஏற்புரை வழங்கிய நூல் ஆசிரியர், வழக்கறிஞர் தி.லஜபதிராய் அவர்கள், "இந்த நூலின் நோக்கம் வரலாற்றை மீள்பதிவு செய்வது மட்டுமே, மாறாக குலத் தாழ்ச்சி உயர்ச்சி சொல்வதன்று. சமீப காலமாக முகநூலிலும் பிற சமூக ஊடகங்களிலும் நேரடியாகவும் மறைமுகமாகவும் இஸ்லாமிய — கிறிஸ்தவ சமூகத்தினருடன் பிற பட்டியல் இன விளிம்பு நிலை மக்களுடன் நிற்க வேண்டிய நாடார்களின் மனவோட்டத்தில், இந்து வலதுசாரி சிந்தனை மிகுதியாக இருப்பதை காண முடிகிறது. இந்த நிலையில் கடந்து வந்த காலத்தை திரும்பிப் பார்ப்பது அவசியமாகிறது" என நூல் குறித்து பேசினார்.

சிறப்பு விருந்தினர்களின் உரைகளுக்கு நடுவில் நூலுக்காக உழைத்தவர்களை அங்கீகரிக்கவும் விழாக்குழுவினர் தவறவில்லை. நினைவுப்பரிசு வழங்கி கவுரவித்தனர்.

கோயில் நுழைவுப் போராட்டம், கழுகுமலைக் கலவரம், சிவகாசி வன்கொடுமை நிகழ்வு, தோள் சீலைப் போராட்டம் போன்ற பல நிகழ்வுகளையும் பதிவு செய்துள்ளார் நூலாசிரியர். தந்தை பெரியார், சௌந்திரபாண்டியனார், காமராஜர், அய்யா வைகுண்டர் போன்ற ஆளுமைகளின் பங்களிப்பினையும் பாங்குடன் பகிர்ந்துள்ளார் தி.லஜபதிராய் அவர்கள். நாடார்கள் மட்டுமல்ல சாதியக் கொடுமைகளுக்கு எதிராக சிந்திக்க கூடிய யாவரும் படித்து பகிர வேண்டிய முக்கியமான வரலாற்று ஆவணமாக வெளிவந்துள்ளது. "நாடார் வரலாறு கறுப்பா? காவியா?"





# காஸ் வன அருங்காட்சியகம்

## தமிழகன் இராஜசேகர்



கோவை சிறப்பிதழ் உருவாக்கத்திற்கான பயணத்தின் இறுதியாக நானும் வரலாற்றுத் துறை மாணவர் சந்திரனும் கோவையில் வன அலுவலக வளாகத்தில் அமைந்துள்ள "காஸ் வன அருங்காட்சியகத்தை" வந்தடைந்தோம்.

வன அலுவலகத்திற்கு எதிரே அமைந்துள்ள இந்தப் பிரிட்டிஷ் காலப் பிரம்மாண்ட அருங்காட்சியகம் கோவையிலேயே மிகப்பழமையான அருங்காட்சியகமாகும்.

நுழைவுச் சீட்டை வாங்கிக் கொண்டு, முதல் தளத்தில் உள்ளே நுழைந்த எங்களுக்கு, ஆச்சரியங்களும் பிரம்மாண்டங்களும் காத்திருந்தன. பறவைகள் மற்றும் வன உயிரினங்களின் மாதிரிகள் பதப்படுத்தப்பட்டு, நம்முன் உயிரோட்டமாகக் காட்சிப்படுத்தப்பட்டிருந்தன. பறவைகள் துவங்கி பூச்சி இனங்கள், பட்டாம் பூச்சிகள், வண்டு இனங்கள், யானைகளின் மிகப்பெரிய எலும்புக்கூடுகள், சிறு உயிரினங்கள் மற்றும் உயிரினங்களின் பதப்படுத்தப்பட்ட உடல்கள் காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தன.



*காசு அருங்காட்சியகத்தின் வரலாறு :*

கோயம்புத்தூரில் வனப் பாதுகாவலராகப் பணியாற்றிய ஹென்ரி ஆன்டர்சன் காசு என்பவரின் முயற்சியால் துவக்கப்பட்டதே, இந்தக் காசு அருங்காட்சியகம். ஒரு சிறிய அறையின் முன் அறையில், படிக்கட்டுகளின் கீழே ஆரம்பித்துள்ளார். இந்த அருங்காட்சியகம் ஏப்ரல் பதினைந்து 1902 ஆம் ஆண்டுச் சென்னை மாகாணத்தின் கவர்னர் அம்பிடில் துரையால் திறக்கப்பட்டது. பல பொருட்கள்

சேகரிக்கப்பட்டுத் தொடர்ந்து பராமரிக்கப்பட்டு வந்ததால், அருங்காட்சியகத்தில் இடப்பற்றாக்குறை வந்துள்ளது. 1905-ல் இந்த அருங்காட்சியகத்திற்காக புதிய கட்டிடம் கட்டுவதற்கும், அங்குப் பொறுப்பாளராக இருப்பதற்கும், ஒருவரை அரசாங்கம் நிர்ணயித்து, அரசாங்க ஆணை பிறப்பித்தது.

புதிய கட்டிடத்தை 1909 ஆம் வருடம் செப்டெம்பர் மாதம் சர்.ஆர்துர் லாலே திறந்துவைத்தார்.

அரசு ஆணையின்படி, இங்குள்ள அனைத்து சேகரிப்புகளும் காசு அவர்களின் சுய முயற்சியாலும், எண்ணத்தினாலும் சேகரிக்கப்பட்டுள்ளது. அதன் காரணமாக இந்த அருங்காட்சியகம், அவரின் பெயரால் "காஸ் வன அருங்காட்சியகம்" என அழைக்கப்படும்" எனக் குறிப்பிடப்பட்டுள்ளது.

ஓர் ஆண்டிற்குப் பிறகு, எப்.எ. லாடஜ் என்பவர், இந்த அருங்காட்சியகம் ஒரு வனக் கல்லூரியுடன் இருந்தால், மாணவர்களுக்கு மிகுந்த உதவியாக இருக்கும். எனவே ஒரு வனக் கல்லூரியும், அதன் அருகில் இந்த அருங்காட்சியகத்தையும் அமைக்குமாறு அரசிற்குக் கடிதம் அனுப்பினார். அதை ஆமோதித்த வனத் துறை மேலாளர், அதனுடன் ஒரு வன ஆராய்ச்சி துறையும் வேண்டும் என்று பரிந்துரைத்தார். அரசும் இந்த பரிந்துரைக்கு ஒப்புதல் அளித்து, 1912 ஆம் ஆண்டில் எப்.எல்.சி. கௌலே பிரவுன் அவர்களைக் கல்லூரியின் முதல்வராகவும், சி.ஸ்ரீனிவாச ராவ் அவர்களை அருங்காட்சியகத்தின்



*Mr. , Horace Arichibald Gass*





பொறுப்பாளராகவும் நிர்ணயித்துச் சென்னை மாகாணத்தின் அப்போதைய கவர்னர் லோர்ட். பெண்ட்லாந்து அவர்களால் அக்டோபர் மாதம் 14 ஆம் நாள் திறந்து வைக்கப்பட்டது.

இரண்டாம் உலகப்போரின் போது, சில ஆண்டுகள் அருங்காட்சியகம் மூடப்பட்டது. மேலும் அந்த இடத்தில், சில போர் அகதிகள் தங்கவைக்கப்பட்டனர். இந்தக் காலக்கட்டத்தில் பல சேகரிப்புகள் அழிந்தும், சிதைந்தும், தொலைந்தும் போயின. அப்போதைய வன அருங்காட்சியக பொறுப்பாளர் ஜெ.எ. மாஸ்டர் மேதரும், கல்லூரியின் முதல்வர் சி.ஆர். இரங்கநாதன் இருவரின் முயற்சியால், மீண்டும் அருங்காட்சியகம் பொது மக்களின் பார்வைக்காகத் திறக்கப்பட்டது












பதப்படுத்தப்பட்ட யானைக் குட்டி

இரண்டாவது தளத்தில், காடுகளிலுள்ள மரங்களின் மாதிரிகள், மரப் பலகைகள் வகைகள், மரங்களிலிருந்து எடுக்கக்கூடிய திரவியங்கள், தைலங்கள், பிசின்கள் மற்றும் பல்வேறு வகையான இரப்பர் வகைகள் காட்சிப்படுத்தப்பட்டிருந்தன.

மேலும் சுவர் முழுவதும் விலங்குகளின் தலைகள், கொம்பு வகைகள் அலங்காரப் பொருட்களாகத் தொங்கவிடப்பட்டிருந்தன. பழங்குடி இனங்கள் மற்றும் வன அதிகாரிகள் பயன்படுத்திய துப்பாக்கிகள், அம்புகள் மற்றும் வன விலங்குகளை விரட்டக்கூடிய




சில ஆயுதங்கள் காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தன.

ஓர் அருங்காட்சியகம் எப்படி அமைய வேண்டும் என்பதில் அறிவுப்பூர்வமாகவும், பிரம்மாண்டமாகவும், அழகாகவும் அமைந்த, எங்களைக் கவர்ந்த ஒரு அருங்காட்சியகமாக, அரசால் பாதுகாக்கப்படும் இந்த காசு அருங்காட்சியகம் விளங்குகிறது. கட்டிடக்கலை, உயிரியல், தாவரவியல், வனவியல் மற்றும் வனம் சார் பொருளாதாரம் படிக்கக்கூடிய மாணவர்கள் கண்டிப்பாகப் பார்க்கக்கூடிய ஒரு தகவல் பெட்டகமாக இவ்வருங்காட்சியகம் விளங்குகிறது. இவ்விதழுக்காகக் கோவையில் நான்கு நாட்கள் அலைந்ததற்குக் கண்ணுக்கு விருந்தாகவும், மனதிற்கு நிறைவாகவும் மேலும் மரபுசார் செயல்பாடுகளின் முக்கியத்துவத்தை விளக்கும் விதமாகவும் தனிப்பட்ட முறையில் மரபுசார் ஆர்வலராக என்னைப்









பெருமளவு ஊக்குவித்த ஒரு கோவிலாக இந்த காசு அருங்காட்சியகம் விளங்குகிறது. மேலும் இந்த அருங்காட்சியகம் பற்றி வருகின்ற இதழ்களில் விரிவாகக் காண்போம்.



# 500 வருட கடலக்காய் திருவிழா


## திருமதி. மகேஸ்வரி பாபு, பெங்களூர்


Pic: Deepa Natarajan

கர்நாடக மாநிலத்தில் உள்ள பெங்களூருவில் அமைந்துள்ள பசவனகுடியில் கெம்பேகௌடா மன்னர் ஆட்சி காலத்தில், 1537ல் கட்டப்பட்ட காளைக் கோவில் (Bull Temple) புகழ்பெற்றதாகும். கோவில் உள்ளே ஒற்றை பாறையில் செதுக்கிய காளைச் சிலை 4.5 மீ உயரமும் 6.5 மீ நீளமும் கொண்டது. காளை சிலையை பசவப்பா, பசவன்னா என்று அழைப்பார்கள். இச்சிலை வளர்வதாகவும், அதை தடுக்க சிலையின் தலையில் கம்பி அணிவித்து இருப்பார்கள். அது சூலம் போல் காணப்படும். இக்கோவில் அருகில் காளைக்கு நன்றி தெரிவிக்கும் வகையில் திருவிழா, டிசம்பர் (கார்த்திகை மாதம்) மாதத்தில் 3 நாட்கள் நடைபெறுகிறது.

இவ்விழா நடைபெற ஒரு புராணக் கதை உள்ளது. பசவன குடியில் நிலக்கடலை பயிரிடப்பட்ட நிலம் இருந்தது. விவசாயிகளின் விளைநிலத்தில் இரவு நேரத்தில் காளை ஒன்று வந்து நிலக்கடலை பயிர்களை சாப்பிடுவதை பார்த்த விவசாயிகள் பயிர்கள் சேதமடையாமல் இருக்க வேண்டியதாகவும், மறுநாள் காலையில் நிலத்தை வந்து பார்த்தபோது, காளை சிலையாக அமர்ந்திருப்பதை பார்த்து வணங்க ஆரம்பித்தார்கள். இதைக் கேட்டு ஆச்சரியமடைந்த மன்னர் கெம்பே கௌடா காளை சிலைக்கு கோவில் கட்டினார். முதல் அறுவடையில் விளைந்த நிலக்கடலை பயிர்களை, புனிதமாகவும், தெய்வீகமாகவும் நினைத்து பசவண்ணா (காளை) க்கு முதல் படையலாக அளிக்கிறார்கள். பிறகு விற்பனைக்குக் கொண்டு செல்கிறார்கள்.



Pic: Reflections



தமிழ்நாடு, ஆந்திரா, கர்நாடகா நிலப்பகுதி விவசாயிகள் *(Bull Temple)* பசவன்னா(காளை)க்கு பிரார்த்தனை செய்து பிரார்த்தனையை செலுத்திவிட்டு விற்பனைக்கு தருகிறார்கள்.

இதுமட்டுமல்லாமல், பல்வேறு பொருட்களின் வியாபாரிகளும் கடைவிரித்து வியாபாரம் செய்து பலன் பெறுகிறார்கள். விவசாயிகள் நியாய விலையில் நிலக்கடலையை விற்பதால் மக்கள் வாங்கி செல்வது அவர்களை ஊக்கப்படுத்துகிறது. ஆயிரக்கணக்கான மக்களைக் கவர்ந்திழுக்கும் திருவிழா மரபு, இன்றும் நடைமுறையில் உள்ளது.

இந்தியாவின் இந்த *I.T.* நகரில் உள்ள மக்களின் நம்பிக்கை ஏற்றுக் கொள்ளப்பட்டு நடைமுறையில் உள்ளது. பழமையான திருவிழாக்கள், நம் பாரம்பரியங்களை, நமது மரபுகளை நினைவூட்டுவது மகிழ்ச்சியாக உள்ளது. நமது கலாச்சாரத்தைக் கொண்டாட இதுபோன்ற திருவிழா அனைவருக்கும் தேவை. மக்கள் மகிழ்ச்சி அடைகின்ற கலக்காய் மேளா (நிலக்கடலை திருவிழா)வை கொண்டாடுவோம்.

திருமதி. மகேஷ் பாபு



# ஹாமில்டன் போலீஸ் அருங்காட்சியகம்

## விஜய் குமார், கோவை




1918ல் தமிழ்நாடு போலீஸ் அருங்காட்சியகம் தொடங்குவதற்கான முயற்சி மேற்கொள்ளப்பட்டது. காவல்துறையின் வளர்ச்சியை ஆவணப்படுத்துவது இந்த அருங்காட்சியகத்தின் முக்கிய நோக்கமாகும். ஆங்கிலேயர் காலக் கட்டிடக் கலைப்பாணியைக் கொண்டுள்ள இக்கட்டிடம் 2016ம் ஆண்டில் அதன் பழமை மாறாமல் புதுப்பிக்கப்பட்டுப் பாதுகாக்கப்பட்டுவருகிறது. காவல் துறையின் சீருடை, புகைப்படங்கள், கலைப்பொருட்கள், பாதுகாப்பிற்காக உபயோகப்படுத்தப்பட்ட இயந்திரங்கள் உள்ள இந்த அருங்காட்சியகம் சுமார் 4000 சதுர அடியைக் கொண்டது. இந்திய காவல்துறையின் வரலாற்றைப்




புகைப்படங்கள்: சந்திரன், கோவை





பெருமையுடன் நினைவுகூறும் வகையில் இந்த அருங்காட்சியகம் செயல்படுகிறது. காவல்துறையின் வளர்ச்சி, வரலாறு, முக்கிய இடங்கள் போன்றவை ஆவணப்படுத்தப்பட்டுள்ளன. நுழைவாயிலில் ஆற்காடு காவல் நிலையத்திலிருந்து கொண்டுவரப்பட்ட இரண்டு பீரங்கிகள் வைக்கப்பட்டுள்ளன.

1980-ஆம் ஆண்டு நவம்பர் 17ம் நாள் அன்றைய தமிழகத்தின் முதலமைச்சர் டாக்டர் எம்.ஜி. ராமச்சந்திரன் அவர்கள் இந்த அருங்காட்சியகத்தைப் பார்வையிட்டு வெள்ளிவாள் ஒன்றைப் பரிசளித்துள்ளார். இங்குக் காவல்துறையில் வழங்கப்படும் பதக்கங்கள், காவல் துறைக்காக வெளியிடப்பட்ட தபால்தலைகள், காவல்துறையில் உள்ள பல்வேறு படிநிலைகள் போன்றவை காட்சிப்படுத்தப்பட்டுள்ளன.

வீரப்பன் மற்றும் மலையூர் மம்பட்டியான் போன்றோரின் ஆயுதங்கள் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ளன. காவல்துறை சார்ந்த துப்பறிய உபயோகப்படுத்தும் எந்திரங்கள், புகைப்படக் கருவிகள், ஒலி மற்றும் ஒளிப்பதிவு செய்யும் கருவிகள், துப்பாக்கிகள் காட்சிப்படுத்தப்பட்டுள்ளன.

ஓய்வு பெற்ற காவல்துறை அதிகாரியும் இவ்வருங்காட்சியகத்தின் வழிகாட்டியுமான திரு. சௌந்தர்ராஜன் பின்வரும் தகவல்களை எங்களுடன் பகிர்ந்துகொண்டார்.

கோவை போலீஸ் அருங்காட்சியக கட்டிடம் 100 வருடங்களாகச் செயல்படுவதாகவும், தற்போது அதை அப்படியே பழமை மாறாமல் புதுப்பித்துக் கட்டியிருப்பதாகவும் கூறினார் அதன் பொறுப்பாளர் சௌந்தர்ராஜன் அவர்கள். அக்கட்டிடத்தைப் பழங்காலத்தைப் போலவே சுண்ணாம்பு, கடுக்கா, கருப்பட்டி, இரசாயனம் ஆகியவற்றைச் சாந்துமாதிரி அரைத்துக் கட்டியதாகத் தெரிவித்தார். 2017 மே மாதம் 17ந் தேதி திறந்ததாகவும் இதுவே ஒரு வரலாறாகும் என்றும் தெரிவித்தார்.

தமிழகக் காவல்துறையில் பயன்பாட்டில் உள்ள அத்தனை ஆயுதங்களும் இந்த அருங்காட்சியகத்தில் உள்ளது. துப்பாக்கிகள், குண்டுகள், தோட்டாக்கள் உள்ளன. பழைய காலத்து லத்தியும் இங்குள்ளது. பைபர் லத்தி, ஷாக் வகை லத்தி இந்த வகை லத்தி சுவிட்ச் போட்டால் ஷாக் அடிக்கும். இது டியர் கேஸ் துப்பாக்கி. இது பழைமை வாய்ந்தது.

ஒவ்வொரு குண்டாகச் சுடும். பல்நோக்கு துப்பாக்கி இங்குள்ளது. அக்னி வர்ஷா என்ற பீரங்கி வண்டி உள்ளது. வஜ்ரா என்ற பீரங்கி வண்டி மின்சாரத்தில் இயங்கக்கூடியது. கிழக்கு மேற்கு வடக்கு தெற்கு என நான்கு திசைகளிலும் திருப்பலாம். 360 டிகிரி கோணத்தில் வைத்துச் சுடலாம். கீழே 4 ரவுண்ட் தோட்டாக்கள் நிரப்பலாம்.

கண்ணீர்புகை குண்டு கூட்டங்களைக் கலைக்கப் பயன்படுவது. சூட்கேஸ் கருவி என்பது மிகமிக முக்கியமானவர்களான ஜனாதிபதி பிரதமமந்திரி ஆகியோர் வரும் போது பின்னால் சபாரி சூட்டில் ஒருவர் நின்று சூட்கேஸ் வைத்துக் கொண்டு நின்றிருப்பார். பார்வைக்காக மூடியை கழட்டி வைத்திருக்கிறோம் மூடியைக் கழற்ற வேண்டியதில்லை. கைப்பிடியிலேயே ட்ரிக்கர் இருக்கும். டிரிக்கர் அழுத்தினாலே சுடும். இது







முழுக்க முழுக்க இந்தியத் தயாரிப்பு.

திருச்சியில் துப்பாக்கி தொழிற்சாலையில் துப்பாக்கிகள் தயாரிக்கிறார்கள். பெரிய பெரிய பணக்காரர்கள் தற்பாதுகாப்பிற்காக உரிமை வாங்கித் துப்பாக்கி வைத்திருப்பார்கள். உரிமை காலம் முடிந்ததும் துப்பாக்கி வேண்டாம் என்று சொல்லி ஒப்படைத்த துப்பாக்கிகளும் இந்த அருங்காட்சியகத்தில் உள்ளது. அந்த துப்பாக்கிகளுக்குண்டான குண்டுகள் எல்லாம் இங்குள்ளது.

வேட்டைக்காகப் பயன்படுத்தப்பட்ட துப்பாக்கிகளும் காவல்துறையினரிடம் ஒப்படைக்கப்பட்டது. அவற்றிற்குண்டான குண்டுகள் இங்குள்ளன.



1798ல் உலகத்திலேயே முதல் காவல்துறையை வாள் வைத்து உருவாக்கியிருக்கிறார்கள். தேம்ஸ்நதி டவர் இங்கிலாந்தில் இந்த வாள் காவல்துறைக்கு ஆயுதமாகப் பயன்பட்டது. அந்தகாலத்தில் எந்த ஆயுதமும் கிடையாது. அப்போது கடற்கொள்ளையர்கள் இருந்தனர். அவர்களைச் சமாளிப்பதற்காக உருவாக்கின வாள்தான் இது. 1918ல் பிரிட்டிஷ் காவல்துறை அதிகாரி ஹாமில்டன் வரும் போது கோவை மாவட்ட காவல்துறையிடம் ஒப்படைக்கப்பட்டது இந்த வாள்.

கைப்பற்றப்பட்ட ஆயுதங்கள்:

வீரப்பன் தருமபுரி மாவட்டத்தில் சுட்டுக் கொல்லப்பட்டபோது கைப்பற்றப்பட்ட

SP
Superintendent Of Police, Coimbatore District F.A.Hamilton EQU And His Team in Front Of The Hamilton Police Club,1920




*ஆயுதங்கள், மலையூர் மம்பட்டியானிடமிருந்து கைப்பற்றப்பட்ட ஆயுதங்கள், விடுதலைப் புலிகளிடமிருந்து கைப்பற்றப்பட்ட ஆயுதங்கள், 84எம்எம் ராக்கெட் லான்சர், 14 கிலோ எடையுள்ள மிலிட்டரி ஆயுதம், 81எம்எம் ராக்கெட் லான்சர், தமிழக்க் காவல்துறையிலுள்ள டிரஸ் கோடுகள், 1980ல் முன்னால் தமிழக முதலமைச்சர் திரு. எம். ஜி.ராமச்சந்திரன் அவர்களால் அளிக்கப்பட்ட வெள்ளி வாள், போலீஸ் பதக்கங்கள், இந்தியாவிலேயே மொத்த காவல்நிலையத்திலேயே 2015ல் B1 போலீஸ் ஸ்டேசன் சிறந்த காவல் நிலையமாக டெல்லியிலிருந்தும், சென்னையிலிருந்தும் பெறப்பட்ட விருது. தமிழக காவல்துறையில் திறம்படச் செயல்பட்டதற்கு மத்திய அரசு வெளியிட்ட தபால் தலைகள்,*

*இந்தியாவிலே முதன்முறையாக 1952ல் சென்னையில் நாய் படை ஆரம்பிக்கப்பட்டது. இது வெடிகுண்டு, போதைப்பொருள், கொலை கொள்ளை கண்டுபிடிக்கப் பயன்படுகிறது. சென்னையிலும் கோவையில் மட்டுமே நாய்படை பயிற்சி நிலையம் உள்ளது.*

*அரிய வகைத் துப்பாக்கி 17 கிலோ எடையுள்ளது. 9.3 அடி நீளமுள்ளது. பிரிட்டிஷ் போலீஸ் ஆபிசர் கோவை வந்தபோது அவர் காவல்துறைக்கு வழங்கியுள்ளார்.*

*1959ல் ஜெர்மனி, ரஷ்யா ஆகிய நாடுகளிலிருந்து கள்ள நோட்டுத் தயாரிக்கப் பயன்படுத்தப்பட்ட எந்திரம் கைப்பற்றப்பட்டுப் பார்வைக்கு வைக்கப்பட்டுள்ளது. 1934 முதல் ரோலிங் ட்ராபி வழங்கிவருகிறார்கள். வெளிநாட்டிலிருந்து வரும் போலீஸ்காரர்கள் கொடைக்கானல் போன்ற மலைவாசஸ்தலத்திற்கு வரும்போது இக்கட்டிடத்தைக் கிளப்பாகப் பயன்படுத்தினார்கள். 1919 முதல் போலீஸ் அருங்காட்சியகமாகச் செயல்பட்டுவருகிறது.*

*இரண்டாவது தளத்திலும் காவல்துறை சம்பந்தமான பல வரலாற்றுச் சிறப்புமிக்கப் பொருட்கள் வைக்கப்பட்டிருந்தன. முதலில் நாங்கள் கண்டது முதன்முதலாகத் துவங்கி தற்போது வரையுள்ள போலீஸ் சீருடைகளுடன் ஆளுயர மாதிரி சிலைகள் வைக்கப்பட்டிருந்தன. மேலும் காவல்துறையில் பல்வேறு படிநிலையிலுள்ள காவலர்கள் அணியும்*







பெல்ட் வகைகள் காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தன. இடது பக்கம் உள்ள முதல் அறையில் முதன்முதலாகக் கைதிகளைப் படமெடுக்கப் பயன்படுத்தப்பட்ட புகைப்படக் கருவி முதல் பிலிம் ரோல், டிஜிட்டல் கேமிரா மற்றும் தற்காலத்திய நவீன பேனா கேமிரா வரை காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தன. அடுத்த அறையில், இரண்டாம் உலகப் போருக்குப் பின்பு முதன்முதலாக உபயோகப்படுத்தப்பட்ட ரேடியோ கருவிகள் முதல் 2005-ம் ஆண்டுவரை உபயோகப்படுத்தப்பட்ட கருவிவரை காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தது. மேலும் தடயவியல் துறையில் பல்வேறு குற்றவாளிகளைக் கண்டுபிடிக்கப் பயன்படுத்தப்பட்ட பலவகையான கருவிகள் இரண்டாம் மற்றும் மூன்றாம் அறைகளில் காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தன.

நான்காவது அறையில் வெடிகுண்டுகளை அகற்றும் நிபுணர்கள் பயன்படுத்தும் கருவிகளான பாதுகாப்பு உடைகள், உணர்வு கருவிகள்












சோழ நாட்டை காவல் காத்த ஆப்பிரிக்கர்கள் காலம் 1838

மற்றும் வெடிகுண்டுகளின் வகைகள் காட்சிக்கு வைக்கப்பட்டிருந்தன. போலீஸ் அருங்காட்சியகத்திற்கு வெளியே ஒரு ஆச்சரியாமானத் தகவல் எங்களுக்காகக் காத்திருந்தது.

மகாபலிபுரத்திற்கு அருகே பிடிக்கப்பட்ட தமிழ ஈழ விடுதலைப் புலிகள் பயன்படுத்திய நீர்மூழ்கி படகு காட்சிப் பொருளாக வைக்கப்பட்டிருந்தது.

இறுதியாக, காவல்துறை அதிகாரி நிஷா அவர்கள் கி.பி. முதல் நூற்றாண்டு முதல் தற்காலம் வரை இருந்த காவல்துறை அமைப்புகள் பற்றிய வரைபடத்தை எங்களுக்கு விரிவாகக் கூறினார்.

அதில் எத்தியோப்பியாவை சார்ந்த கறுப்பினத்தவர்கள்






இரண்டாம் உலகப் போரில் பயன்பட்ட ரேடியோ கருவி முதன் முதலாக காவல்துறைக்கு பயன்பட்டது.












(Abyssinian) காவல்காரரர்களாக சோழமண்டலத்தில் காவல் காரராக பணியில் அமர்த்தப்பட்டிருந்த விவரம் எங்களுக்கு தெரியவந்தது. கடைசியாக காவலர்களுக்கு ஊதியம் அளிக்க பயன்படும் தகடில் பொறிக்கப்படும் ரசீதுகள் காட்சிப்படுத்தப்பட்டிருந்தன.



ஞதிகளைப் புகைப்படம் எடுக்கும் கருவி

www.heritager.org



மலையூர் மம்பட்டியான்

மலையூர் மம்பட்டியானின் உணமையான கதைக்கு வருவோம். 27 கொள்ளை, 9 கொலை வழக்குகளில் சமந்தப்பட்டஒருவன் மலையூர் மம்பட்டியான். அவருடைய உண்மையான பெயர் அய்யாத்துரை. இவருக்கு இரண்டு மனைவிகள், ஐந்து பிள்ளைகள், ஒரு சகோதரரும் இருந்தனர்.

சாதாரணமாகத் துவங்கிய இவர் வாழ்வில் பல திருப்பங்கள் நிகழ்ந்துள்ளது. ஊரிலிருந்த இரண்டு குழுக்களுக்கு நடுவில் நடந்த தகராற்றில் இவர் கொலைகாரன், கொள்ளைக்காரர், வழிப்பறி செய்யும் நபராகவும் மாறிப்போனார். ஒவ்வொரு வருடமும் ஆடி மாதம் அம்மன் திருவிழா நடப்பது பழக்கம். அந்த வருடத் திருவிழாவில் இரண்டு குழுக்களுக்கு நடுவில் இராமாயணம் . மகாபாரதம் போன்ற கதைகளில் வரும் கதாபாத்திரங்களைப் போன்று வேடம் கட்டி அலங்கரிக்கப்பட்ட மாட்டு வண்டியில் வரும் நிகழ்ச்சிக்கு இரு குழுக்களும் ஏற்பாடு செய்திருந்தது. ஒரு குழுவின் தலைவர் திருவிழாவில் கடை போட்டு அதிக வியாபாரம் செய்ய, இன்னொரு குழுவிற்கு அது மனக்கசப்பை உருவாக்கியது.

1956 ஆம் ஆண்டு திருவிழாவில் சண்டை பெரிதாகிக் கைகலப்பு ஏற்பட்டது. காவல்துறை குவிந்து ஊரடங்கு உத்தரவு செயல்படுத்தப்பட்டது. மம்பட்டியானும் அவன் தோழர்களும் இன்னொரு குழுவிலிருந்த நபர்களைத் தாக்கி, அதற்காக கைதுசெய்யப்பட்டனர். விடுதலை செய்யப்பட்டு வெளியான அன்று மம்பட்டியானின் தந்தையும், உறவினரும் எதிரியின் குழுவால் கொல்லப்படுகின்றனர். இதனால் ஆத்திரம் அடைந்த மம்பட்டியான் எதிரி குழுவின் தலைவர் , அவர் மகன்கள் என நான்கு பேரை கொன்றுவிட்டு காட்டில் சென்று சகோதரருடன் பதுங்கிவிடுகிறான்.

சிறிது காலம் காட்டில் வாழ்ந்த மம்பட்டியான் கொள்ளைக்காரனாக மாறினான். இரண்டு ஆண்டுகள் கடந்த நிலையில் அவனுக்கும் அவன் சகோதரனுக்கும் சண்டை ஏற்பட்டுப் பிரிந்து போயினர். தகவல் அறிந்த காவல் துறையினர் அவன் சகோதரனைச் சுற்றி வளைத்துச் சுட்டுக் கொன்றனர். மேலும் மம்பட்டியானை பற்றித் துப்பு தருபவர்களுக்கு ஐந்தாயிரம் பரிசு தரப்படும் என்றும் அறிவித்தனர். பல முறை முயன்றும் காவல் துறையினரால் மம்பட்டியானை கைது செய்ய முடியவில்லை. இந்த நிலையில் மம்பட்டியானுக்கு சிக்கல்ராம்பட்டியை சேர்ந்த கருப்பண்ணன் என்பவருடன் நட்பு ஏற்பட்டது. அவன் கள்ளச்சாராயம் விற்பவன்.

அவனைத் தேடி அவன் வீட்டிற்குச் செல்லும் அளவிற்குப் பழக்கம் ஏற்பட்டது. அப்போது அவனுடைய தங்கையுடன் காதல் ஏற்படவே, இருவரும் சந்தித்துவந்தனர். அதைப் பற்றி அவள் அண்ணனிடம் பேசி அவளைக் கல்யாணம் செய்துகொள்ள எண்ணினான். அவன் மறுத்துவிடவே கைகலப்பானது. கருப்பண்ணனும் காவல்துறையின் உதவியை நாடினான். அவனை விஷம் கொடுத்துக் கொன்றுவிடும் படி ஆலோசனை வழங்கப்பட்டது. ஆனால் இந்த விஷயம் எப்படியோ மம்பட்டியானுக்கு தெரியவரச் சண்டை பெரிதானது. சண்டையில் கருப்பண்ணன் மம்பட்டியானை சுட்டுக் கொன்றான். ஆனால் இன்னொரு விதத்திலும் மம்பட்டியானின் மரணம் பேசப்படுகிறது. அது, மம்பட்டியான் கருப்பண்ணன் வீட்டிற்கு விருந்திற்கு அழைக்கப்பட்டு தர்பூசணியில் விஷம் வைத்து மயங்கியதும் சுட்டுக் கொல்லப்பட்டான். மம்பட்டியானை கொன்றதற்கான பரிசு கருப்பண்ணனுக்கு வழங்கப்பட்டது.

இறந்த உடலைப் பிரேதப்பரிசோதனைக்கு பிறகு யாரும் பெற்றுக்கொள்ள வராததால் அரசே தகனம் செய்தது. அங்குப் பல்லாயிரக்கணக்கான பொதுமக்கள் அவனைக் காணக் கூடியிருந்தனர்.



கொல்லப்பட்ட பிறகு

# கடனாநதியும் சிவசைலநாதரும் மேற்குப் பார்த்த சிவாலயம்

– ச.சு.நாகராஜன், சித்த மருத்துவ மாணவன்

அன்றைய நாள் பிப்ரவரி 2, நெல்லையில் இருந்து நாங்கள் 9 பேர் ஒன்றாய் அன்றைய பயணத்திற்காகக் குழுமியிருந்தோம். நாங்கள் அத்தனை பேரும் சித்த மருத்துவக் கல்லூரி மாணவ, மாணவியர் தான்... முத்தமிழரசி, மாதவி, கௌசல்யா மணிவண்ணன், முரளி, நான் (ச.சு. நாகராஜன்) உட்பட அனைவரும் சரியாக 7.15 மணிக்கு நெல்லை சந்திப்பில் செங்கோட்டை செல்லும் இரயிலில் பயணத்தைத் தொடங்கினோம்.

அன்றைய பயணத்தில் முதலில் அத்ரிமலை செல்வதாகத் தீர்மானித்திருந்தோம். பேச்சுகளிலும், கதையாடல்களிலும் கடந்து சென்ற ஒன்றே கால் மணிநேரத்தில் நாங்கள் ஆழ்வார்குறிச்சியை அடைந்திருந்தோம்... அங்கிருந்து நேரே அத்ரிமலை நோக்கி ஆட்டோவின் கைங்கரியத்தால் பயணம் நீண்டது.

அண்ணன் அத்ரிசேர்மேன் அண்ணாவின் உதவியால் பேசிக்கொண்டே வழியிடையே காணப்பெற்ற அந்த மேற்குத்தொடர்ச்சி மலைகளை ரசித்துக் கொண்டே பயணம் தொடர்ந்தது... 12 கிலோமீட்டர் பயணம் களைப்பை தராது கடந்தது. வழியில் மலையின் மேல் வெள்ளியை உருக்கி

வடித்தார் போல் பாயும் அருவி ஒன்றை பார்த்ததும், "அண்ணா அங்க போக முடியுமா? " என்று வினவவும் "அதுலாம் அடர்ந்த காடு தம்பி இப்போ விலங்குகள் நடமாட்டம் அதிகம், *Forestry* அனுமதி கிடையாது" என்று மாரியப்பன் அண்ணா மறுமொழி உதிர்த்தார்.

பின் நேரே அணைகட்டில் சங்கமித்தோம்... கடனாநதி நீர்த்தேக்கம்... கருணைநதி கடனாவாக திரிந்தும் அதன் குளுமையில் திரிபு ஒன்றும் இல்லை. சில்லிடும் நீர் நம்மைச் சிலிர்க்க வைக்கும்.

அணைக்கட்டில் நடைபயின்று 1 மணிநேரம் அவ்விடம் கடத்தினோம். அந்த அணைக்கட்டில் குரங்குகள் கொடுத்த தொல்லை சொல்லி மாளாது... எங்கள் பையைப் பறித்துச் சென்றது... பின்னர் அதை நோக்கி கத்தியபடியே நான் முன்னேறி பின் பயந்து பதுங்கினேன். நாம் கொடுத்து பழகிய திண்பாண்டங்களால் தான்... எல்லாக் காட்டு குரங்குகளும் அவற்றின் இயல்பை மறந்தது.

பின் அத்ரிமலை ஏறுவதற்காக நாங்கள் விசாரித்த போது அன்று பாதையில் விலங்குகள் நடமாட்டம் அதிகம் இருந்ததால் விடமாட்டேன் என்று அறுதியிட்டுக் கூறிவிட்டார்.. எவ்வளவோ முயன்றும் பின் அவர் வேண்டும் என்றதால் நிலைமையின் வீரியம் அறிந்து அவ்விடம் விட்டு நகர்ந்தோம்... உண்மையில் இனி தான் அந்தக் கோயில் போவதாகப் பயணம் திரிந்தது.

சிவஷேலம் நோக்கி பயணம் நீண்டது ... சிவனுக்குப் பல ஆலயங்கள் உள்ளன ஆனால் மேற்கு நோக்கிய சிவனின் ஆலயங்கள் அரிதே அப்படி மேற்கு நோக்கி அமைந்த சிவன் கோயில்களில் குறிப்பிடத்தக்கது.

கோயிலுக்குப் போகும் வழியில் எங்களுடன் கருணைநதியும் பயணித்தாள். கடனாநதி என்பது இவளின் இந்நாள் பெயர்..

மாரியப்பன் அண்ணனின் பேச்சுக்கொடுத்தேன். அவரும் கோயில் கதையில் தனக்குத் தெரிந்ததைக் கூற தொடங்கினார் "தம்பி, அக்கா, தங்கைங்க இரண்டுபேரு. நித்யகல்யாணி, பரமகல்யாணி-ன்னு பேரு. இரண்டும் பேருக்குமே சிவன் மேல கொள்ள பிரியம்... இரண்டு பேரும் தவம்பண்ணி சண்டை போட்டு சிவனைக் கல்யாணம் பண்ணிக்கிட்டாங்க.. அவங்க சண்டை போட்டு நுள்ளி போட்ட மலைதான் இந்த "நுள்ளிமலை" னு எதிரே இருந்த மலையைக் காண்பித்தார்.... அந்தப் பக்கம் நித்யகல்யாணியாகவும், இந்தப்பக்கம் பரமகல்யாணியாகவும் இருக்கிறாள் அம்மன்" னு சொல்லிமுடித்தார்.

வாய்வழி கதைகளில் தான் வரலாறும்,





மக்களின் வாழ்வியலும் பதியப்பட்டுக் கிடக்கிறது. மீண்டும் உறைத்தது.

10.15 மணியளவில் நேரே சிவசைலம் வந்துசேர்ந்திருந்தோம். கோயில் அவ்வளவாக ஆளரவமற்ற அமைதி உருவாக நின்றிருந்தது... நான் சிலைகளைச் சிலாகிக்கத் தொடங்கினேன்.

சிலைகளின் வடிவநேர்த்தியில் மூழ்கியெழ மூச்சடங்கிப் போனது... வடித்த சிற்பிகள் வாஞ்சையாய் கற்றளியிற்கு உயிரூட்டி உள்ளனர்... பிற்கால பாண்டியர்கள், நாயக்கர்கள், சிற்றரசர்கள் கைவண்ணத்தில் சிற்பக்கூடமாய் மிளிர்கிறது அந்தக் கோயில்... அந்தக் காலபைரவர் சிலை என்னை மிகவும் கவர்ந்தது. சாந்தமான முகமும், பாந்தமான சிரிப்பும் அதை ரசிக்க வைத்தது...நேரே சிவசைலநாதர் முன்னே இருந்த சிறிய நந்தி அந்தத் திமில் புடைப்பும், அதன் நெற்றியில் வைத்திருந்த ஒற்றைச் செம்பரத்தை பூவும் நினைவு நகர வெகுநேரம் பிடித்தது .

பின் சன்னதியில் பெரிதாக வீற்றிருந்த அந்தப் பெரிய நந்தியின் பின்னணியில் சில சுவாரசிய கதைகள் உண்டு. இந்த சிலையைச் செதுக்கியபோது அந்த நந்தி சிலை எழுந்து நகரமுற்பட்டதாம். அவ்வளவு உயிரோட்டமான சிற்பி போலும். உடனே இந்திரன் தன் உளியால் அந்த திமில் அருகே தட்டி அதை அமர வைத்தானாம்... பரவலாக சொல்லப்பட்டு வரும் கதை. ஆனால் அந்த நந்தி சிலையின் திமில் அருகே இன்றும் ஒரு வெட்டுக்குறி தென்படுவது கதைகள் கதைகள் மட்டும் தானா?? என்று கேள்வி எழுப்பியது.

அந்த ஒரு காலை உயர்த்திய வண்ணம் எழக் காத்திருக்கும் நந்தி நிச்சயம் நெல்லை சிற்பிகளின் உளிகளின் உன்னத பரிசில்.

கோயில் சுற்றுப் பிரகாரத்தில் காணப்படும் நடராஜரின் ஐம்பொன் சிலைகள்... கண்களை கட்டிப்போடத் தவறவில்லை.

சிற்பிகள் வடித்த அரிவையர் சிலைகளின் இடுப்பு வளைவு நளினமும்... நம்மை வியக்க வைக்கும். பிரமாண்ட தூண்கள் வரிசைகட்டி வாஞ்சையாய் ஒரு பிரமாண்டத்தை தனக்குள் அடக்கிக் கொண்டு அமைதியாக இருக்கிறது... பெயரறியாத பறவைகளும், பெருந்தகை மாந்தர்களும் சிலைகளாக காத்திருக்கிறார்கள்.

பாண்டிய மன்னனின் அவா தீர்த்த சடையப்பர் (மூன்று கோடுகள் இன்றும் லிங்க திருமேனியில் உண்டு) அருள்பாளித்து சிரிக்கிறார்.... பரமகல்யாணி அம்மனும் தன் பங்கிற்கு அழகு பதுமையாய் வீற்றிருக்கிறாள்.

கால்கள் நகர முற்பட்டாலும் கண்கள் இருப்புக் கொள்ள வைக்கும்.. பாண்டிய நாட்டுக் கோயில் விட்டு ஒருவழியாக நகர்ந்தோம்.



# கோவையின் வழிகாட்டி
## (நேர்க்காணல்)
## விஜய் குமார், கோவை




கோவையில் வரலாற்றுத்துறையின் அடையாளமாகவும், இளம் தலைமுறையினருக்கு நம் வரலாற்றின் சிறப்புகளையும் முக்கியத்துவத்தையும் கொண்டு சேர்க்கும் அரும் பணியில் உள்ள தொல்லியல் அறிஞர். திரு. ஜெகதீசன் அவர்களை நமது கோவை இதழுக்காக நேர்க்காணல் ஒன்றை நடத்தினோம்.

கேள்வி: வணக்கம் அய்யா உங்களின் கல்வி பயணம் பற்றி கூறுங்கள்.

வரலாற்றுத் துறையில் முதுகலை படிப்பு, வரலாறு பிரிவில் ஆய்வியல் நிறைஞர், தொல்லியல் மற்றும் கல்வெட்டு பட்டய படிப்பும், கல்வெட்டு துறையில் முனைவர் பட்டமும் சென்னை பல்கலைக்கழகத்தில் முடித்துள்ளேன்.

கேள்வி: தங்களின் தொல்லியல் பங்களிப்புகள் என்னென்ன

ஐந்து வருடங்கள் கல்வெட்டு ஆய்வாளராகத் தமிழ்நாடு தொல்லியல் துறையில் பணியாற்றியுள்ளேன். இருபது முதல் முப்பது புதிய கல்வெட்டுகளை அந்த கால கட்டத்தில் கண்டறிந்தேன். சில பழங்கால பொருட்களையும், சிலைகளையும் கண்டுபிடித்துள்ளேன்.

கேள்வி: கோவையில் நடைபெறும் கொங்கு கால்நடை திருவிழா பற்றி கொஞ்சம் கூறுங்களேன்...

இதுவரை ஐந்து விழாக்கள் நடந்துள்ளன. சமத்தூர் ஜமீன் குடும்பத்தினர் "வானவராயன் அறக்கட்டளையை" நிறுவியுள்ளனர். அதன் பொறுப்பை என்னிடம் கொடுத்துள்ளனர். நாட்டு மாடுகளைப் பாதுகாக்கவும், அவற்றைப் பற்றி ஒரு விழிப்புணர்வு மக்களிடம் வரவேண்டும் என்பதற்காகவும் இவ்விழா நடத்தப்படுகிறது. இதற்காக நாட்டு மாடுகளின் கண்காட்சி வைக்கப்பட்டு அவற்றில் சிறந்த மாட்டிற்குப் பரிசளிக்கப்படும்.

கேள்வி: வானவராயன் அறக்கட்டளையின் பணிகள் பற்றி கூறுங்கள்

சமத்தூர் ஜமீன் குடும்பத்தினர் "வானவராயன் அறகட்டளையை" நிறுவியுள்ளனர். அதன் முக்கிய நோக்கம் மக்களுக்கு விழிப்புணர்வு கொண்டுவரவும், நம் வரலாற்றைக் காப்பதும் மிக முக்கியமாக இளைய சமூகத்தினரிடம் இதைக் கொண்டு சேர்ப்பதும் ஆகும். இதுவரை எழுபத்து ஒன்பது மாதாந்திர தொடர் சொற்பொழிவு நடைபெற்றுள்ளது. அவற்றுள் எழுபத்து ஐந்து கொங்கு நாடு சம்மந்தமானது. நான்கு தமிழக தொல்லியல் சார்ந்தது. கோவையைப் பொறுத்த



அளவில் நம் பாரம்பரியத்தைப் பாதுகாப்பதில் மக்கள் பெரும் ஈடுபாடு கொண்டுள்ளனர். முன்பெல்லாம் எங்களின் மாதாந்திர சொற்பொழிவிற்குப் பொதுமக்கள் அதிக அளவில் கலந்து கொண்டனர், ஆனால் இப்போது அதிக அளவில் கல்லூரி ஆய்வு மாணவர்கள் கலந்துகொள்கிறார்கள். "இந்தியன் எக்ஸ்பிரஸ் பத்திரிகை எங்களின் மாதந்திர சொற்பொழிவைப் பற்றிய செய்திகளைத் தொடர்ந்து பகிர்கிறார்கள். நாங்களும் இணையத்தில் எங்களின் சொற்பொழிவுகளைப் பதிவு செய்கிறோம்.

இப்பகுதியில் ஏதேனும் அருங்காட்சியகம் அமைக்க வேண்டிய தேவை இருந்தால் அதையும் நாங்கள் செய்கிறோம். இதுவரை கோயம்புத்தூர் விழாவிலும், மாநகராட்சி விழாக்களிலும் வைத்துள்ளோம். கோயம்புத்தூரின் வளர்ச்சிக்குத் துணைபுரிந்த நாற்பது நபர்களைப் பற்றி, அவர்களின் வாழ்க்கை பற்றியும் *Incredible Coimbatorians*" என்று காட்சிப்படுத்தியிருக்கிறோம். கோயம்புத்தூரில் உள்ள மரபு கட்டிடங்களின் புகைப்படங்களை எடுத்து அதை வரைபடங்களாக வரைந்து காட்சிப்படுத்துகிறோம். அவற்றுடன் அந்த கட்டிடம் பற்றிய குறிப்புகளை இணைத்தோ, அல்லது அந்த கட்டிடம் இன்று இல்லாது போயிருந்தால் அது எங்கே இருந்தது என்பதை பற்றிய குறிப்புடன் வைக்கிறோம்.

எங்களின் அறக்கட்டளை சார்பாக , தமிழ்நாடு வரலாற்றுப் பேரவையில் இந்தியச் சுதந்திர நிகழ்வுகள் குறித்த கட்டுரைப் போட்டிகள் நடத்தி பரிசுகள் அளிக்கிறோம்.

கேள்வி: தாங்கள் ஒருங்கிணைக்கும் வரலாற்று நடைபயணம் பற்றி

இதுவரை இருபது ஐந்து மாதாந்திர மரபு பயணங்கள் நடந்துள்ளது. ஆர்வம் உள்ள அனைவரும்





கலந்துகொள்ளலாம். கட்டணங்கள் ஏதும் நாங்கள் பெரிதாக வசூலிப்பதில்லை. ஆரம்பத்தில் எந்த கட்டணமும் பெறாமல் அழைத்துச்சென்றோம். பிறகு இதில் ஆர்வம் உள்ளவர்கள் கலந்துகொள்ளக் குறைந்தபட்ச கட்டணமாக நூறு ரூபாய் நிர்ணயித்தோம். அதிலும் பள்ளி குழந்தைகள், மாணவர்களுக்குக் கட்டணம் கிடையாது. இந்த பயணங்கள் பெரும்பாலும் கொங்கு நாட்டின் வரலாற்று இடங்களுக்கும், இரண்டு மூன்று முறை கீழடி அகழாய்விற்கும் சென்றுள்ளோம். பழைய கோயம்புத்தூர் நகரத்தைக் காண்பிக்கும் வகையில் "கோயம்புத்தூர் மாலை மரபு நடை" என்று ஒன்றை நடத்துகிறோம். அதில் மாணவர்களை தெருக்களில் உள்ள ஒவ்வொரு முக்கியமான வீடுகளையும், கட்டிடங்களையும் அவற்றை பாதுகாக்கவேண்டிய அவசியத்தையும் எடுத்துரைக்கின்றோம்.

கேள்வி: மாணவர்களுக்காக என்னென்ன விழிப்புணர்வு நிகழ்ச்சிகள் நடத்துக்கின்றீகள்.

பள்ளிகளிலிருந்து அழைப்பு வரும் போது அத்தகைய நிகழ்ச்சிகளை நடத்துகிறோம். அரசு கலைக் கல்லூரியில் "கோவில் கலைகள்" என்று ஒரு பாடம் உள்ளது. அதைப் பயிலும் மாணவர்களை எங்களின் அறக்கட்டளையின் மூலம் முழு செலவையும் ஏற்றுக்கொண்டு இரண்டு நாட்கள் மதுரையைச் சுற்றி உள்ள வரலாற்றுப் புகழ்மிக்க இடங்களுக்கு அழைத்துச் சென்று வந்தோம். "கோயம்புத்தூர் விழா" என்று ஒரு விழா கோவையில், ஜனவரி மாதத்தில் ஒவ்வொரு வருடமும் மூன்று நடக்கும். அந்த சமயத்தில் நாங்கள் கோவையில் உள்ள ஒவ்வொரு கல்லூரியில் உள்ள ஒவ்வொரு துறையிலும் உள்ள ஒரு வகுப்பில் மாணவர்களைக் கோவையைச் சுற்றி உள்ள வரலாற்றுச் சிறப்புமிக்க இடங்களான பேரூர், கோவையில் உள்ள அருங்காட்சியகங்கள், கோவையின் திரைத்துறை வரலாறு, பழைய ஸ்டுடியோக்கள் போன்ற இடங்களை எங்களின் செலவில் அழைத்துச் செல்வோம்.

கேள்வி: நீங்கள் வெளியிட்டுள்ள புத்தகங்கள் பற்றி கூறுங்கள்

தொல்லியல் துறை இராமேஸ்வரம், கோயம்புத்தூர் மாவட்ட கல்வெட்டுகள், கொங்கு களஞ்சியம் ,இரண்டு தொகுதிகள், புத்தகங்களின் உதவி ஆசிரியராக இருந்துள்ளேன். சிறிய புத்தகங்களாக பீளமேடு, கீரனூர் -அம்மன் கோவில், சமத்தூர் நவராத்திரி விழா போன்றவை வெளிவந்துள்ளன.

இரண்டு புத்தகங்கள் அச்சில் உள்ளன, இன்னும் வெளியிடப்படவில்லை. அவை "தமிழர்களின் வழிபாட்டு மரபுகள்", இன்னொன்று "தென் கொங்கு வீர கேரளர்கள்" என்பது.

கேள்வி: இளைய தலைமுறையினர் வரலாற்றை ஏன் அறிந்துகொள்ள வேண்டும் என்று நீங்கள் நினைக்கிறீர்கள்

நம் நாடு கலை, வரலாறு, கலாச்சாரம் எனப் பலவற்றிலும் பன்முகத்தன்மை கொண்டு விளங்கும் நாடு. இதில் ஒற்றுமையைக் கொண்டுவர நம் வரலாற்றை அறிந்துகொள்வது அவசியமாகும். கலாச்சாரத்தையும் வரலாற்றையும் இளைய தலைமுறையினர் அறிந்துகொள்வது அவசியம். சப்பானில் இரண்டாம் உலகப்போரில் குண்டுகள் வீசப்பட்ட ஹிரோஷிமா, நாகசாக்கி போர் நினைவுச்சின்னங்களைப் பள்ளி மாணவர்களுக்குக் காண்பிப்பது ஒரு முக்கிய நிகழ்வாக எண்ணப்படுகிறது. அதன் காரணம் நம் நாடு எவ்வளவு சிதைந்து, மீண்டு வந்துள்ளது என்றும் நம் நாட்டை பற்றி நாம் பெருமை கொள்ளவேண்டும் என்றும் குழந்தைகள் மனதில் விதைக்கும் முயற்சி அது. அதைத் தான் நாமும் இங்குச் செய்ய வேண்டும். வரலாற்றை அறிந்துகொண்டு அவர்களின் கலாச்சாரத்தைப் பற்றிய பெருமையை அறிந்துகொள்ளும் போது இந்த சமூகம் அதை அடுத்த நிலைக்குக் கொண்டு செல்லும்.

(நிறைவு...)



# காட்டு மனிதனின் குரல்

## –வருசக்கனி. ஆய்வு மாணவர்



*FOREST RIGHTS ACT.* வனங்களின் மீதான பழங்குடியினரின் உரிமையை நிலைநாட்ட உருவாக்கப்பட்ட சட்டம். அதாவது தங்கள் வாழ்வாதாரத்திற்கா வனங்களில் வாழும் பழங்குடியினர் வனங்களில் உள்ள வளங்களைத் தங்களது தேவைக்காகப் பயன்படுத்திக் கொள்ளலாம் எனபதற்கான அத்தாட்சி இது. இதன் மூலம் வனங்களுக்கு உள்ளேயே சிறிய அளவிலான பள்ளிகள், விவசாயம் பார்க்கும் பூமி என்று அதை அளவாகப் பயன்படுத்தி தங்கள் வாழ்வாதாரத்தைக் காப்பாற்றி வந்தார்கள் பழங்குடியினர். இந்தச் சட்டம், 2005 டிசம்பர் 13ம் தேதிக்கு முன்பிருந்தே காடுகளில் வசித்துவரும் பழங்குடியினருக்கு அவர்கள் குடியிருக்கும் நிலம் மற்றும் பயிரிடும் நிலம் ஆகியவற்றுக்குப் பட்டா வழங்க வேண்டும் என அனுமதி அளிக்கிறது. இது மேலும் மேலும் தங்களது தேவைகளுக்காகப் பழங்குடியினர் காடுகளை அழிக்க கூடாதென்பதற்காகவும், இருக்கும் நிலத்தை அவர்களுக்கு உறுதிப்படுத்திக் கொடுப்பதற்காகவும் ஏற்படுத்தப்பட்டது. *WILDLIFE FIRST* என்ற அமைப்பு 2008ம் ஆண்டு இதை எதிர்த்து *SUPREME COURT*-ல் வழக்கு தொடர்ந்தது.

இந்த வழக்கை விசாரித்து உத்தரவை பிறப்பித்த *SUPREME COURT,* காட்டுப் பகுதிகளில் வசிக்கும் உரிமை ரத்தான மக்கள் உடனடியாக காடுகளை விட்டு வெளியேற்ற வேண்டும் என்று தெரிவித்தது. *SUPREME COURT*-ன் இந்த உத்தரவின் மூலம் மட்டும் 16 மாநிலங்களில் சுமார் 10 லட்சத்திற்கும் மேற்பட்ட பழங்குடியி மக்கள் காட்டை விட்டு விரட்டப்படும் நிலை உருவாகியுள்ளது. சரி, காடுகள் காப்பாற்றப்படும்தானே, நல்லதுதானே என்று கேட்பவர்களுக்கு இன்னொரு அதிர்ச்சியளிக்கும் கதையும் பின்னால் இருக்கிறது. வளர்ச்சி என்ற பெயரில் காடுகளின் கனிம வளங்களை கார்ப்பொரேட்டுகள் கொள்ளையிட, பழங்குடி மக்கள் தங்களின் வாழிடமான வனங்களிலிருந்து அகற்றப்படுகிறார்கள். அதற்காகத்தான் அவர்களுக்கு பட்டா மறுத்து உத்தரவிட்டிருக்கிறது *SUPREME COURT.* அதுவும் எப்படி??? நாடு முழுவதும் 11,27,446 வனப்பகுதி பட்டா மனுக்களை இவர்களே நிராகரித்துவிட்டு, இவர்களே வனப்பகுதி குடியிருப்புகளை அகற்ற உத்தரவிடுவார்களாம்.

இதன் மூலம் சுமார் 45 லட்சம் பழங்குடிகள் அகற்றப்படுவர். தமிழ்நாட்டில் 9,029 குடியிருப்புகளுக்கு பட்டா மறுக்கப்பட்டதன் மூலம் சுமார் 35 ஆயிரம் பழங்குடியினர் அகற்றப்படுவர். இப்படி அகற்றிய பின்னர், *CORPORATE*-கள் அந்த இடத்திலிருந்த கனிம வளங்களைத் தங்கள் இஷ்டம் போல, கேட்பதற்கு ஆளின்றி எடுத்துச் செல்லாம் அல்லவா. *ODISHA*-வில் மட்டும், 300 மில்லியன் மதிப்புள்ள இரும்புத் தாதுவை வெட்டி எடுக்க 33 வருடங்களுக்கு *CONTRACT* போட்டு, 1409 *HECTARE* கையகப்படுத்த உள்ளார்களாம். இங்கு எப்படி எட்டுவழிச்சாலைக்கு மக்களிடம் கருத்துக் கேட்காமலேயே கூட்டம் நடத்தினார்களோ, அதே போல அங்கேயும் மக்கள் கிராம சபையின் மூலம் அனுமதி அளித்தாகவும், இடத்தை விற்றதாகவும், *CORPORATE*-களே மக்களின் கையெழுத்தைத் தாங்களே போட்டு ஆவணங்களைத் தயார் செய்துள்ளார்களாம். இதில், பழங்குடியின மக்கள்




ஆங்கிலத்தில் கையெழுத்துப் போட்டது, ஒரே நபரின் பெயர் மூன்று முறை வேறு வேறு விதமான கையெழுத்து, கைநாட்டு போட்டிருப்பது போன்றெல்லாம் ஆர்வக் கோளாறு கதைகள் நடந்திருக்கின்றன.

சிலரின் வாழ்க்கைக்காக இத்தனை லட்சம் மக்களின் வாழ்வாதாரத்தை பறிக்க முயற்சி செய்யும் சட்டமும் அரசும், அதனால் விளையப் போகும் விளைவுகளை தாங்களும் தங்கள் சந்ததிகளும்தான் அனுபவிக்க வேண்டியிருக்கும் என்ற அடிப்படைப் புரிதல் கூட இல்லாமல் செயல்பட்டு வருகின்றனர். யாரோ பழங்குடியினர்தானே என்று அலட்சியமாக மக்கள் இருந்துவிடலாம். ஆனால், கொஞ்சநஞ்சம் பெய்யும் மழையும், அதற்குக் காரணமான காட்டையும் அழிக்க அனுமதித்தால், கடைசியில் குடிப்பதற்கு தண்ணீர் கூடக் கிடைக்காமல் அனைவரும்தான் கஷ்டப்பட வேண்டி வரும் என்பதை கொஞ்சமாவது நினைவில் வைத்துக் கொண்டால் நல்லது.

பழங்குடிகள் என்போர் யார் என்றால் தொன்றுதொட்டோ அல்லது பன்னெடுங்காலமாகவோ (10,000 ஆண்டுகளுக்கும் மேலாக), ஒரு நிலப்பகுதியில் வாழ்ந்து வருபவர்கள். இவர்கள் தங்களுக்கென தனி பழக்க வழக்கங்களும், மொழியும், நிலமும் அதைச் சார்ந்த செடி, கொடி, மரம், விலங்குகளைக் கொண்டும் தங்கள் வாழ்க்கையைத் தன்னிறைவோடு வாழ்பவர்கள். இவர்கள் தங்களுக்கென தனி கலைகளும், கடவுள், சமயம் மற்றும் உலகம் பற்றிய கொள்கைகளும் கொண்டிருப்பர். தனி மனித வாழ்க்கையிலும், உறவு முறைகளிலும், சமூகமாக வாழ்வதிலும் தங்களுக்கென தனியான முறைகள் கொண்டவர்கள். தற்கால மக்களிடம் அதிகம் பழகாமலும், பணம் பற்றிய பொருளாதாரம் இல்லாமலும், தற்கால தொழில் வளர்ச்சி வழி பெற்ற புதிய பொருட்கள், வசதிகள் எதையும் பெரிதாக ஏற்றுக் கொள்ளாதவர்களுமாக இருக்கிறார்கள். நிலத்துடனும் இயற்கையுடனும் நெருங்கிப் பிணைந்த வாழ்வைக் கொண்ட இந்தப் பழங்குடிகள் கடந்த 100 ஆண்டுகளாகவே தொடர்ந்து பல இன்னல்களை அனுபவித்து வருகிறார்கள். கிழக்கு ஆப்ரிக்காவின் மசாய்கள், யுகாண்டா & மத்திய ஆப்ரிக்காவின் பிக்மிக்கள், தாய்லாந்தின் காரன்கள், போஸ்ட்வானாவின் பசர்வாக்கள், கென்யாவின் ஒயிக்கள், பிரேசிலின் காய்பூக்கள், எத்தியோப்பியாவின் முர்சிக்கள் தொடங்கி இந்தியாவில் உள்ள 427 பழங்குடி குழுக்கள் வரை அனைவரின் கதையையும் கேட்டால் அவை அச்சுபிசகாமல் ஒன்றாகவே இருக்கிறது. உலகம் முழுவதிலும் கடந்த 30 ஆண்டுகளாக பலவிதமான திட்டங்களின் பெயரில் பழங்குடிகளை அவர்களின் பூர்வீக நிலங்களில் இருந்து அப்புறப்படுத்த அரசும் உலகின் பெரும் தொண்டு நிறுவனங்களும் (BINGO-Big International NGO's) துடித்து வருகிறது.

பழங்குடிகள் முற்றிலும் காடு சார்ந்த வாழ்வு உடையவர்கள். அவர்களின் தேவைகளை எல்லாம் அருகாமைக் காடுகள்தான் பூர்த்தி செய்கிறது. எரிபொருள், நன்னீர், மருந்துகள், மீன், பழங்கள், கிழங்குகள், பசை, தேன், தீவனம் என எல்லாவற்றையும் காலாற அலைந்து திரிந்து தங்களின் தேவைக்கு ஏற்ப எடுத்து வருவார்கள். மரபாகவே காட்டில் உள்ள 9000 தாவரங்கள் பற்றிய அறிதல் அவர்களுக்கு உண்டு. இதில் 7500 வகை தாவரங்களை அவர்கள் உணவாகவும் மருந்தாகவும் பாவித்து வருகிறார்கள். இயற்கையின் மடியில் வளர்ந்த இந்தக் குழந்தைகளை இந்திய சமூக அமைப்பு தனது கட்டுமானத்தில் இருந்து தொலைதூரத்தில் (Out Castes) தான் வைத்திருந்தது, இந்தியாவின் எல்லா மலைத் தொடர்களிலும் இவர்களை நாம் காணலாம்.

வெள்ளையர்கள் ஆட்சி செய்த காலத்தில் வேலையாட்களை விடுமுறைக்கு இங்கிலாந்திற்கு அனுப்பினால் அந்த ஆட்கள் திரும்பி வருவதில்லை என்ற காரணத்தால் அங்குள்ள பருவகாலத்தை ஒத்த இடங்களை இங்கு தேடினார்கள். மோயர் பள்ளத்தாக்கு வழியே நீலகிரி மலை மீது ஏறி அவர்கள் ஊட்டி - குன்னூரில் தங்கள் ராணுவ தளத்தை அமைத்தார்கள், வெள்ளையர்கள் இங்கு இருக்கும் உயர்ந்த மலைகளைக் கைப்பற்றிய மறுநிமிடம் சொகுசு பங்களாக்கள், விளையாட்டு அரங்குகள் கட்டுவதற்குக் காட்டு மரங்களை வெட்டத் தொடங்கினார்கள்.

அங்கு மட்டுமல்லாது அவர்களின் எல்லா கவர்னர் மாளிகைகளுக்கும், இங்கிலாந்தில் ரயில் தண்டவாளங்கள் அமைக்கவும் மரங்களை வெட்டி அனுப்பிய வண்ணம் இருந்தார்கள். அடுத்து இந்தக்



காடுகளில் இயற்கையாய் உருவான இந்த மரங்களை எல்லாம் முற்றாக வெட்டிவிட்டு அந்த சரிவுகளில் தைல மரங்களையும் (Ecualyptus), அவர்களின் அன்றாட தேவைகளில் ஒன்றாகத் தேயிலைத் தோட்டங்களையும், அமைத்தார்கள். இன்று நம் கண்களில் விரியும் இந்தப் பசுமை நிலப்பரப்பைத்தான் பச்சை பாலைவனம் (Green Desert) என்று திணையியல் அறிஞர்கள் அழைக்கிறார்கள். காடுகள் அழிக்கப்பட்டு அங்கு தேயிலைச் செடிகள் நடப்பட்டதுதான் மலைகளில் ஏற்படும் நிலச்சரிவிற்குக் காரணம். அதன் பின் இந்த மலைகளில் உல்லாசமாக வேட்டை விளையாட்டுகளை (Game Hunting) தொடங்கினார்கள், இதற்குப் பல இடங்களில் உள்ளூர் ஜமீன்தார்களையும் சேர்த்துக் கொண்டார்கள். குழுக்களாகப் பிரிந்து ஒரே நாளில் இவர்கள் சுட்டு வீழ்த்திய சிங்கங்கள், புலிகளின் எண்ணிக்கையும் புகைப்படங்களும் இன்று பல நூல்களில் காணக்கிடைக்கின்றன. அதில் *Sport on the Niligiri s, Wayanad Jungle Memories, Guide to Shikar on the Nilgiris, Ootachamund-Frederick Price* முக்கியமான நூல்கள்.

அவர்களின் தோட்டங்களில், வேட்டைகளில், அவர்களின் ஒத்தாசைகளுக்கு என சமதளங்களில் இருந்து ஒரு பெருங் கூட்டத்தை மலைகளில் குடியமர்த்தினார்கள். மலைமீதுள்ள சுற்றுலா தளங்களில் வசிப்பவர்களில் 90% பேர் பழங்குடிகள் அல்லாதவர்களே. வெள்ளையர்கள் இந்திய நிலப்பரப்பை ஆட்சி செய்த காலத்தில் அவர்களுக்கு வந்த மிகப் பெரும் எதிர்ப்புகள் பழங்குடிகளிடம் இருந்துதான் வந்தன. 1809ல் பீல் போர், 1817ல் பாயிக் போர், 1836-1866 வரையிலான கும்சார் போர், 1857 - 1864 வரையிலான சம்பல்பூர் போர் என வெள்ளையர்களின் நிம்மதியையே இது கெடுத்தது. பிர்சா முண்டா, கன்ஹூ சந்தால், காச்யா நாயக், தானா தோரா, தல்காலா சாந்து என பல பழங்குடி புரட்சியாளர்களைப் பற்றிய கதைப்பாடல்கள் இன்று வரை இந்த மலைச்சிகரங்களில் ஒலிக்கும்போதும் இவைகளில் எதையும் சுதந்திரம் பெற்ற பின்பும் கூட வரலாற்று அறிஞர்கள் பதிவு செய்யவோ, பாடத் திட்டங்களில் சேர்க்கவோ மறுத்துவிட்டார்கள்.

பழங்குடிகள் மீதிருந்த இந்த பயத்தினால்தான் அவர்களை நெருக்கமான வேலைகளில் அமர்த்தாமல் வேறு சாதிகளை நாடினார்கள் வெள்ளையர்கள். இருப்பினும் பிரித்தானியர்கள் காலம் தொட்டு இன்று வரை பல சட்டங்கள் - ஷரத்துக்களின் வழியே பழங்குடிகளின் வாழ்வை நிர்மூலமாக்க தொடர்ந்து அரசுகள் பற்றுறுதியுடன் முயற்சிகள் மேற்கொண்டு வருகின்றன. இந்திய வன சட்டம் - 1927, வனவிலங்கு பாதுகாப்பு சட்டம், வனப் பாதுகாப்பு சட்டம், வன உரிமைகள் சட்டம் - 2006 என தொடர்ந்து சட்டங்கள் பல காலம்தோறும் வந்து கொண்டேயிருக்கின்றன. முதலில் வனங்கள், வனப் பாதுகாப்பு தொடர்புடைய ஆவணங்களின் மொழியே மிகவும் அராஜகமானது. கல்வி அறிவு அதிகம் இல்லாத பழங்குடி சமூகத்தினர் இதனை விளங்கிக் கொள்வது மிகவும் கடினமானது. இதில் ஒவ்வொரு அதிகாரியும் இதற்குப் புதுப் புது விளக்கங்கள் கொடுத்து பெரும் குழப்பத்தையே விளைவித்து வருகிறார்கள். சமீபத்தில் இயற்றப்பட்ட வன உரிமை சட்டம் 2006 பழங்குடிகளின் உரிமைகளை வரையறுத்தாலும் அதை நடைமுறைப்படுத்த அரசு நிர்வாகம் தயாராக இல்லை.

சமதளங்களில் வாழும் நமக்கு காடுகளைப் பற்றிய அறிதல் என்பது அறவே கிடையாது. சமதளங்களின் கதைகளில் கூட "பயங்கரமான காடு இருந்தது" என்றும் "ஒரு காட்டில்" என்றுதான் தொடங்குவோம், நம்மைப் பொறுத்தவரை காடு என்பது ஒரு மர்மப் பிரதேசம். காட்டுமிராண்டிகள், காட்டுவாசிகள், காட்டுத்தனமாக என நாம் பாவிக்கும் வார்த்தைகளே நாம் காட்டை எப்படி ஒரு நாகரீகமற்றவர்கள் வாழுமிடமாகப் பார்க்கிறோம் என்பதைக் கோடிட்டுக் காட்டுகிறது. ஆனால் மறுபுறம் இயற்கையில் இருந்து முற்றாக விலகிய, நகர வாழ்க்கையில் இருந்துகொண்டு குளிரூட்டப்பட்ட அறைகளில் உட்கார்ந்துகொண்டு வனச் சட்டங்கள் இயற்றப்படுவது எத்தனை கேலிக்கூத்தானது என்பதை நீங்களே யூகித்துக் கொள்ளுங்கள். பொதுவாக, அரசும் ஊடகங்களும் கடந்த 30 ஆண்டுகளாக நகரவாசிகளின் தலைகளில் பழங்குடிகள் பற்றிய பல கற்பிதங்களை ஏற்றி வைத்துள்ளது. ஒரு காட்டில் பல்லுயிரியம் பாதிக்கப்பட்டால், அதன் அடர்த்தியில் குறைவு ஏற்பட்டால் உடனே இந்த உலகம் பழங்குடிகள்தான் அதற்குக் காரணம் என்கிறது. ஒரு வனப் பகுதியில் மிருகங்களின் எண்ணிக்கை குறைந்தால் உடனே அந்தப் பழியும் அங்கு வசிக்கும் பழங்குடிகளின் மேலே தான் விழுகிறது.

கடந்த 50 ஆண்டுகளில் உலகம் முழுவதும் உள்ள பழங்குடிகள் மிகப் பெரும் இடப்பெயர்வுகளைச் சந்தித்து வருகிறார்கள். பெரிய அணை கட்டுதல், கனிம வளங்களை வெட்டி எடுத்தல், வனங்களைப் பாதுகாத்தல், தேசிய பூங்காக்கள் அமைத்தல் என பல தலைப்புகளின்கீழ் இவர்கள் வலுக்கட்டாயமாக வெளியேற்றப்பட்டார்கள். இவர்களை வெளியேற்றினால்தான் வனங்களைப் பாதுகாக்க இயலும் என்று ஒருபுறம் பேசிக்கொண்டே மறுபுறம் ஆயிரக்கணக்கான ஏக்கர் நிலத்தைப் பெரும் நிறுவனங்களுக்குத் தடையின்றிக் கொடுத்து வருகிறது. இந்த நடவடிக்கைகள் எல்லாம் வளர்ச்சியின் பெயரால் நடைபெறுவதால் இதைக் கேள்வி கேட்கும் பழங்குடிகள், இயற்கை ஆர்வலர்கள், பசுமைப் போராளிகள் என அனைவரும் வளர்ச்சியின் எதிரிகளாகவே கருதப்படுவார்கள்.

(தொடரும்...)

# மாணவர்கள் உருவாக்கும் தொல்லியல் அருங்காட்சியகம்

## – Heritager. சந்திரன் கோவை

*1999ஆம் ஆண்டுக் கோவை அரசு கலைக் கல்லூரியில் தொல்பொருள் அருங்காட்சியகம் அமைக்கப்பட்டது. இந்தத் தொல்பொருள் அருங்காட்சியகம் பேராசிரியர் இராஜாராம், டாக்டர் T. இளங்கோவன் மற்றும் கல்லூரியின் முதல்வர் எம்.கே.கஜபதி அவர்களின் முயற்சியாலும் தொடங்கப்பட்டது. முதுகலை இரண்டாமாண்டு படித்து வந்த விஜயகுமார் மற்றும் இவர் வகுப்பைச் சேர்ந்த 17 பேர் கொண்ட குழு கோவையைச் சுற்றியுள்ள கொடுமணல், வெள்ளளூர், அவினாசி பகுதிகளில் ஆய்வு முகாம்கள் நடத்தி அதில் கிடைத்த பொருட்களை மக்களின் பார்வைக்காக அருங்காட்சியகத்தில் வைத்துள்ளனர்.*

*ஆய்வில் கிடைக்கும் பொருட்களைத் தொல்லியல்துறையில் பதிவுசெய்துவிட்டு அருங்காட்சியகத்தில் காட்சிக்கு வைக்கின்றனர். கோவையிலுள்ள பல்வேறு கல்லூரிகளிலிருந்தும், வெளியூர்களிலிருந்தும் மாணவர்கள் இங்குக் காட்சிக்கு வைக்கப்பட்டுள்ள அரிய பொருட்களைக் காண வருகின்றனர்.*

*அரசு கலைக் கல்லூரி அருங்காட்சியகத்தில் இடம் பெற்றுள்ளவை :*

*குறிப்பாகப் பழங்கால மக்கள் பயன்படுத்திய முதுமக்கள் தாழி, ரோமானிய மது ஜாடிகள், மன்னர் கால மாளிகை செங்கற்கள், இரும்பு பொருட்கள், பழங்காலச் சிலைகள், கல்வெட்டுகள், முதுமக்கள் தாழியிலிருந்து எடுக்கப்பட்ட எலும்புத் துண்டுகள், செம்பு காசுகள், தோடர் இன மக்களால் பயன்படுத்தப்பட்ட மூங்கிலால் ஆன கைத்தடிகள், உபகரணங்கள், 12ஆம் நூற்றாண்டில் பயன்படுத்தப்பட்ட மண்ணினாலான இட்லி பாத்திரம் நில உடைமை ஓலைச்சுவடி, ஆவணப் பத்திரங்கள் போன்றவை 19 ஆம் நூற்றாண்டின் நடைமுறையை எடுத்துக்காட்டுகின்றன.*

*மருத்துவத் தாவரம் ஆங்கில மருந்துகள் உதவி இன்றி மக்கள் எவ்வாறு வைத்தியம்*




பார்த்துள்ளனர் என்பதும் அங்குக் காட்சிப்பொருளாக வைத்துள்ளனர். அவை சங்கு பூச்செடி, முடக்கத்தான் கொடி, நித்தியக்கல்யாணி, நாயுருவி செடி, நன்னார் கொடி, நீர்பிரம்மை செடி, அப்பக்கோவை செடி, ஆடா தொடா ஆகியவை உள்ளன. இவை கோவை மாவட்டத்திலேயும் உள்ளன.

உபகரணத்தில் உள்ள தொடர்கள் இருளர்களின் கலாச்சாரத்தைப் பிரதிபலிப்பதற்காகப் பழங்குடியினர் அருங்காட்சியகம் அமைக்கப்பட்டுள்ளது.

2012ஆம் ஆண்டு மாணவர் குழுவுடன் அமராவதி ஆற்றங்கரையில் டாக்டர் எம். செந்தூர்பாண்டியன், கல்வெட்டு ஆய்வாளர் திரு. சுந்தரம், முனைவர் எஸ். பாரதிராஜ் முதலியோர் ஆய்வு செய்தனர். ஒரு உடைந்த கல் தூணை அவர்கள் அவ்வாய்வில் கண்டறிந்தனர். அதிலிருந்த கல்வெட்டின்படி அக்கல்வெட்டு பொன்னன் துரையன் என்பவனால் வெட்டப்பட்டுள்ளது. இவன் கொங்கு சோழனான வீரராஜேந்திரனது அமைச்சனாக இருந்திருக்கலாம் என நம்பப்படுகிறது.

அரசு கலைக் கல்லூரியில் உள்ள அருங்காட்சியகத்தின் நோக்கம் :

மக்களின் பழங்காலப் பழக்கவழக்கம், செயல்பாடு ஆகியவற்றையும், நடைமுறை வாழ்க்கை முறையையும், பொதுமக்களுக்கு இதன் மூலம் எடுத்துக்கூறுவதே இதன் முதன்மை நோக்கமாகும்.

இதனைப் பற்றி இந்த மாணவர் அருங்காட்சியகத்தின் பொறுப்பாளரும், பேராசிரியருமான திருமதி. ஜூலி நம் இதழுக்கு அளித்த தகவல் பின்வருமாறு.

கோயம்புத்தூர் கல்லூரியில் வரலாற்றுத் துறை 1850ஆம் ஆண்டுத் துவக்கப்பட்டது. இந்தத் துறை ஆரம்பித்தபோது, 1987-89ல் நான் படித்தேன் நான் இளங்கலை மற்றும் முதுகலை இரண்டும் படித்தேன். படிக்கும்போதும் தொல்பொருள் பாடப்பிரிவு மிகவும் சுவாரஸ்யமாக இருக்கும். ஆனால் பாடம் சொல்லிக்கொடுக்கும் போது பலபேருக்கு அந்தப் பாடத்தின் மீது விருப்பமில்லாமல் இருக்கும். அதற்காகவே ஒரு சிறப்புத்தகுதி வாய்ந்த பேராசிரியர் இருந்தார். இந்தப் பாடத்தைப் பற்றி விரிவாகத் தகவல்கள் சொல்வார். அவர் பெயர் பேராசிரியர் ராஜாராம். அவர் பல்வேறு இடங்களுக்குச் சென்று தொல்பொருட்களைச் சேகரிப்பார்கள்.

அவற்றை மாணவர்களை வைத்து ஆய்வு செய்து அங்கங்கே போய் மாணவர் குழுவிற்கு உற்சாகமூட்டி அதிக அளவில் பொருட்களை சேகரிப்பார். அதில் பழைய கற்கால இரும்பு கருவிகள், ஈமத் தாழிகள், பலவகையான மட்பாண்டங்கள் அடங்கும். பானை ஓடுகள் மீது மேலே குறியீடு வரையப்பட்டுள்ளன. ஒவ்வொன்றும் பொருளும் சிறப்பாகவும் வித்தியாசமாகவும் உள்ளன. திப்புசுல்தான் காலத்துச் செங்கற்கள், 13, 14 மற்றும் 16ஆம் நூற்றாண்டைச் சேர்ந்த சிலைகள், சதிக்கல், விஜயநகரத்துக் காலச்










சிலைகள், அம்மன் சிலைகள் உள்ளது. சிந்துசமவெளி நாகரீகம் வடஇந்திய அமைப்பு போன்றவை இங்குள்ளது.

அருங்காட்சியகத்திற்கு நிறையப் பொருட்கள் வேண்டும். மாணவர்கள் போய் வித்தியாசமாகச் சேகரித்து வருகிறார்கள். காட்சிப்படுத்த இடம் இல்லை. நாங்கள் எல்லாவற்றையும் பாதுகாத்து வைத்திருக்கிறோம். பொருட்கள் மீது பேர் எழுதி எந்த எந்தக் குழு மாணவர்கள் சேகரித்திருக்கிறார்கள் என்று குறிப்பிட்டுள்ளோம்.

நாணயங்களையும் சேகரித்துள்ளோம். அவற்றில் விஜயநகரத்து நாணயம், சோழர்காலத்து நாணயம், வெளிநாட்டு நாணயம், இந்திய நாட்டு நாணயம், ஆகியவை அடங்கும். சில நாணயங்களை அவை எக்காலத்தைச் சேர்ந்தது என்று கண்டறிய வேண்டியுள்ளதால் அது தொடர்பான முயற்சிகளில் ஈடுபட்டுள்ளோம். நாணய ஆராய்ச்சி தொடர்பான விவரம் தெரிந்தவர்களை அழைத்து அதைக் கண்டறிந்து அவற்றைக் காட்சிக்கு வைப்போம். முதுமக்கள் தாழி ஒன்று முழுமையாகக் கிடைத்துள்ளது மற்றொன்று பகுதியாகக் கிடைத்துள்ளது. இரண்டையும் காட்சிக்கு வைத்திருக்கிறோம். அதில் பெரிய தாழியில் தொப்புள் கொடியின் வடிவமைப்பு அது சிறப்பு வாய்ந்ததாகக் கருதப்படுகிறது. பழங்காலத்திலே இத்தனை அழகாக வடிவமைத்திருக்கிறார்கள் என்று நம்பவே முடியவில்லை. அக்காலத்திலே எந்தக் கருவியுமின்றிக் கையினால் செய்யப்பட்ட பொருட்களே இவ்வளவு அழகாக நேர்த்தியாக இருக்கும்போது, இந்தக் காலத்தில் தொழில்நுட்பத்தைப் பயன்படுத்தினால் இன்னும் எவ்வளவு அழகாகச் செய்யலாம். அக்காலத்திலே வாழ்ந்த மனிதர்கள் இப்படி வித்தியாசமாகவும் விசேஷமாகவும் சிந்தித்திருக்கிறார்கள்.

பழங்குடியினர் அருங்காட்சியகம் ஒன்று உள்ளது. 2012ல் ஆரம்பித்தோம். அதில் பார்த்தால் ஆனைமலை தொடர், நீலகிரியிலுள்ள மேற்குத் தொடர்ச்சி மலைவாழ் மக்கள் வாழ்க்கை முறையை, அவர்கள் என்ன பொருட்களைப் பயன்படுத்தினார்கள் அவற்றையெல்லாம் நேராகச் சென்று பார்த்துச் சேகரித்து அவற்றைக் காட்சிக்கு வைத்திருக்கிறோம். வடுகர்கள், பனியர், குறும்பர், இருளர், குலையர், மலையாளர்கள் பயன்படுத்திய இசைக்கருவிகள், வேட்டையாடப் பயன்படுத்திய பொருட்களின் மாதிரியை வாங்கி காட்சிக்கு வைத்திருக்கிறோம்.

தற்போது வாழ்ந்து கொண்டிருப்பவர்களின் பழக்க வழக்கங்களுக்கும் முன்னர் வாழ்ந்தவர்களுக்கும் வித்தியாசம் இருப்பதால் அவர்களை வைத்தே பொருட்களை வாங்கிக் காட்சிப்படுதியிருக்கிறோம். காடர், முதுவர், மலசர் இன்னும் பல பழங்குடியினர் இருக்கிறார்கள். அவர்களிடமிருந்து பொருட்களை வாங்கி காட்சிப்படுத்த மாணவர்கள் முயற்சி மேற்கொண்டிருக்கிறார்கள். சமீபத்தில் நாங்கள் பழங்குடியினர் வாழும் பகுதிக்குச் சென்றோம். ஆனால் அவர்களைப் பார்க்க முடியவில்லை. எரிந்துபோன அவினாசி மரத்தேர் துண்டுகளிலிருந்த











மரச்சிற்பங்களைக் காட்சிக்கு வைத்திருக்கிறோம். அருங்காட்சியகத்திற்கு மேலும் நிறையே பொருட்கள் சேகரிக்க வேண்டியிருக்கிறது. எங்களுக்கு அரசிடமிருந்து நிதி கிடைத்தால் உதவியாக இருக்கும். பொருளுதவி கிடைத்தால் இதைப் பெரிதுபடுத்த முடியும்.

அருங்காட்சியகத்தைக் காணும் பொதுமக்களும் மாணவர்களும் நம்முடைய பாரம்பரியத்தைப் பற்றித் தெரிந்து கொள்ளவும், நம்முடைய மரபு எப்படி இருந்தது? நம்முடைய நினைவுச் சின்னம் எப்படிப்பட்டது? அதை எப்படிப் பாதுகாக்க வேண்டும்? என்பதை அறிந்து கொள்ள உதவியாக இருக்கும் என்பதைப் பதிவு செய்கிறேன்.

அருங்காட்சியகத்தின் வளர்ச்சிக்கு மாணவர்களின் பங்களிப்பு அதிகம். மாணவர்கள் இல்லை என்றால் இதை நாம் பராமரிக்க முடியாது. மாணவர்களை எப்படி இப்பணியில் தொடர்ந்து செயல்படவைப்பது? இவர்களுக்கு எப்படிப் பொருட்களைச் சுத்தப்படுத்தச் சொல்லிக்கொடுப்பது என்று வழிதெரியாத நேரத்தில் எங்களுக்கு ஒரு அரிய வாய்ப்பு கிடைத்தது. மாணவர்களுக்குக் கோயம்புத்தூர் அரசு அருங்காட்சியகத்தில் ஒரு வார காலக் குறுகிய பயிற்சி அளிக்கப்பட்டது.

பயிற்சி பெற்ற மாணவர்களுக்கு எந்த எந்தப் பொருட்களை எப்படிச் சுத்தம் செய்ய வேண்டும் என்று தெளிவாகச் சொல்லிக்கொடுத்தார்கள். அவ்வாறு சொல்லிக் கொடுத்ததால் அப்பயிற்சி முடித்து வந்த மாணவர்கள் அருங்காட்சியகத்தைச் சுத்தம் செய்யும் வேலையைச் செய்ய ஆரம்பித்தார்கள். இவர்களில் எந்தெந்த குழுவில் யாரெல்லாம் அருங்காட்சியகத்தில் வேலை செய்தார்களோ அவர்களுக்கு அருங்காட்சியகத்தில் பதிவேடு பேணப்பட்டு அந்தப் பதிவேட்டில் அவர்களின் பெயர் எழுதிக் கையெழுத்திட்ட வைத்தோம். பயிற்சி


பேராசிரியர். ஜூலி









பெற்ற பெண்கள் அறையைச் சுத்தம் செய்யும் வேலை. ஒவ்வொருவரும் தூரிகை வைத்து அவர்கள் பயிற்சியில் சொல்லிக்கொடுத்தப்படி எந்தவித சேதாரமும் ஆகாமல் சரியாகச் சுத்தம் செய்தார்கள். பயிற்சிக்கு சென்றதால்தான் இது சாத்தியமாயிற்று. அந்த பொருளின் முக்கியத்துவம் தெரிந்ததால்தான் அவர்களால் பொருட்களைச் சுத்தம் செய்யமுடிந்தது. இல்லையென்றால் அது ஒரு சாதாரணக் கல் என்று நினைத்திருப்பார்கள். எவ்வளவு சிரமமெடுத்து ஒவ்வொருவரும் அந்தப் பொருளைப் பாதுகாப்பாகச் சுத்தம் செய்தார்கள். கண்ணாடி அலமாரியிலிருந்து எப்படி உடையாமல் எடுத்துச் சுத்தம் செய்ய வேண்டும், சிலைகளை எப்படிச் சுத்தம் செய்ய வேண்டும் என்று தெரிந்துவைத்திருந்தார்கள்.

வகுப்பு முடிந்ததும் 1 முதல் 2 மணி நேரம் செலவழித்துச் செய்கிறார்கள். விடுமுறை நாட்களிலும் அருங்காட்சியகத்தைச் சுத்தம் செய்வோம். சில நாட்கள் இரவு 8 மணி வரை மாணவர்கள் வேலை செய்திருக்கிறார்கள். அந்த நாட்களில் நம்முடைய சொந்த செலவிலேதான் அனைத்து தேவைகளையும் பூர்த்திச் செய்ய வேண்டும் வேறு யாரிடமிருந்தும் பெற முடியாது.

இதனைப் துறையின் தலைவர். முனைவர் கானப்ப்ரியா கூறுகையில் " எங்களுக்கு அருங்காட்சியகத் துறை என்று ஒரு பாடப்பிரிவு இருக்கிறது. வரலாற்றுத் துறைக்கு ஒரு பாடப்பிரிவு இருக்கிறது? முதுகலை தேர்வில் ஒரு பாடம் இருக்கிறது. அவர்களுக்கு இது கண்டிப்பாகப் பயன்படும். ஆய்வறிக்கை செய்பவர்கள் கல்லூரி அருங்காட்சியகத்தை ஆய்வுக்கு எடுத்துக் கொள்கிறார்கள். வெளியிலிருந்து அதிகளவில் மாணவர்கள், நாளிதழ்களுக்குக் கட்டுரை எழுதுபவர்கள், பொதுமக்கள் என பலபேர் பார்க்கிறார்கள். இக்கல்லூரி மாணவர்களே பொருட்களைச் சேகரித்து அளித்துள்ளதால் அவை இந்த அருங்காட்சியகத்திலேயே காட்சிப்படுத்தப்பட்டுள்ளது.

5 வருடத்திற்கு ஒரு முறை ஆய்வுக் குழு ஒன்று வருகிறது. அந்த ஆய்வுக் குழுவில் கல்லூரியின் சிறப்பம்சமாக இந்த அருங்காட்சியகம் இருக்கிறது. அருங்காட்சியகத்தைப் பார்க்க டெல்லியிருந்து வருகிறார்கள். அவர்கள் எதிர்பார்த்து வருகிற அளவிற்கு அருங்காட்சியகத்தை மேம்படுத்த அதிக அளவு வேலை செய்ய வேண்டும். இனி வரும் நாட்களில் அருங்காட்சியகம் தொடர்ந்து சிறப்பாகச் செயல்படக் கல்லூரி பணியாளர்களும், புதிதாக வருகின்ற மாணவர்களும், வரலாற்றுத் துறை சார்ந்த ஆய்வாளர்களும் அதிகாரிகளும் பங்கேற்க









வேண்டும். எங்கள் கல்லூரிக்குப் புதிதாக யாராவது வந்தால் முதலில் அவர்களுக்குக் காண்பிப்பது இந்த அருங்காட்சியகத்தைத்தான்.

மாணவர்களுக்காக மட்டும் பயன்படுத்தாமல் பொதுமக்களும் கண்டு பயன்பெற வேண்டும். இதன் மூலம் மாணவர்கள் சேகரித்த இந்தத் தொல்லியல் பொருட்கள் ஒரு அறையில் முடங்கிவிடாமல் அனைவரும் தெரிந்துகொள்ள இயலும். ஒரு நிர்வாகி மற்றும் உதவியாளரை அமைப்பதன் மூலம் இந்த அருங்காட்சியகத்திலுள்ள பொருட்களின் தகவல்களை ஒழுங்குப்படுத்தித் தெளிவான முறையில் பார்வையாளருக்கு விளக்கமுடியும்.

தொல்லியல் விழா, மரபுவார விழா மற்றும் கோவைதினம் போன்ற நாட்களில் மாணவர்கள் சேகரித்த தொல்லியல் பொருட்களைக் காட்சிக்கு வைப்பதன் மூலம் மாணவர்களுக்கு அங்கீகாரமும் பொதுமக்களுக்கு விழிப்புணர்வும் ஏற்படும்.

பொதுமக்களுக்காக அருங்காட்சியகத்தைத் திறக்கும்பொழுது அதனைப் பராமரிக்கவும் மற்றும் புதுப்பிக்கவும் நிதியுதவியும் பொறுப்பாளர்களும் தேவைப்படுகின்றனர். அதற்காக நாங்கள் எல்லா வகையிலும் முயன்று வருகின்றோம்." என்றோம்.



முனைவர். கானப்ப்ரியா



# தாரமங்கலம் நடுகற்கள்

## – A.T மோகன், வைரம்

## தாரமங்கலம் வரலாற்று ஆய்வு அறக்கட்டளை





கடந்த ஒரு வாரமாகச் ஏற்பாடு செய்யப்பட்ட ஒரு தேடல் சில வேலைகளால் தடைப்படும் சூழல் ஏற்பட்டது. நண்பர் அன்புமணியிடம் கடந்த வாரம் பேசி, "இந்த ஞாயிறு தாரமங்கலம் நடுகற்கள் பார்க்கலாம்" என முடிவு செய்து, சேலம் வரலாற்று ஆர்வலர்கள் குழுவின் நண்பர்கள் கலைச்செல்வன், செல்வமணி மற்றும் வரதராஜன் ஆகியோருடன் செல்ல அனைத்து ஏற்பாடுகளும் செய்திருந்தேன்.

ஆனால் திடீரென நண்பர் திருத்தொண்டர் பேரவை ராதாகிருஷ்ணன் ஐயா அவர்கள் சனிக்கிழமை காலை 10 மணி அளவில் அலைபேசியில் "இன்று மாலை 4 மணி அளவில் சேலத்திலிருந்து பழநி சென்று அதிகாலையில் தரிசனம் முடித்துச் சதுரகிரி செல்லலாம் என ஒரு எண்ணம், நீங்களும் உடன் வர்ரீங்க" என அன்பு கட்டளை இட்டார், அவர் சதுரகிரி எனச் சொன்ன உடனே என்னுடைய மனம் தடுமாற ஆரம்பித்து விட்டது. ஆனாலும் "இல்லை ஐயா நான் ஏற்கனவே தாரமங்கலம் செல்ல உறுதி அளித்திருக்கிறேன். அதனால் உங்களுடன் வேறு ஒரு சமயத்தில் இணைந்து கொள்கிறேன்" என கூறிவிட்டேன். மனதுக்கு சிறிது சங்கடமாகவே இருந்தது.

அதன் பிறகு நண்பர் கலை போன் செய்து "சார் தேர்தல் பயிற்சி முகாம் போட்டு உள்ளார்கள். அதனால் நான் வர இயலாது" என கூறிவிட்டார். உடனே அடுத்து செல்வமணியும் போன் செய்து "சார் எனக்கு தேர்தல் பயிற்சி முகாம் போட்டு உள்ளார்கள் என்னாலும் வர இயலாது" என அடுத்தக் குண்டு போட, நானும் கொஞ்சம் தளர்ந்து விட்டேன். சரி திட்டமிட்டபடி நானும் வரதனும் செல்லலாம் எனக் காத்திருக்க இரவு ஒன்பது மணிக்கு அன்புமணியிடம் இருந்து ஒரு வாய்ஸ் மெசேஜ் "அண்ணா என்னால் நாளை வர இயலாது. முக்கியமான வேலை விசயமாக நான் இப்போது வெளியூர் சென்றுகொண்டிருக்கிறேன். நான் நாளை மாலை தான் ஊருக்கு வருவேன். சிரமத்திற்கு மன்னிக்கவும்" என்று.

அட இது என்ன புது சோதனை? இவை அனைத்தும் மதியத்திற்குள் நடந்திருந்தால் பழநி மலை, சதுரகிரி இரண்டிற்கும் போய் இருக்கலாம். சாரும் மாலையே புறப்பட்டுச் சென்றிருப்பார் என மனசுக்குள் நண்பர்கள் அனைவரையும் திட்டிக்கொண்டு இந்த ஞாயிறு வீண் என நினைத்திருந்தேன். ஆனால், காலையில் வரதன் அலைபேசியில் அழைத்து "நாம் போகலாம். நீங்கள் வாருங்கள்" என அழைக்க, நண்பகல் 12 மணி அளவில் புறப்பட்டு தாரமங்கலம் போய் சேர்ந்தோம்.

எங்கு செல்வது எனப் புரியாமல் இளமீஸ்வரர் கோயிலைச் சுற்றி வந்தோம்.திடீர் என நினைவுக்கு அன்புமணி கூறிய வைரம் நினைவுக்கு வர அவருக்குப் போன் செய்தேன். அவரும் "அண்ணா சிறிது நேரம் இருங்கள் வந்துவிடுகிறேன்" என்று கூறி ஐந்து நிமிடத்தில் அவரின் நண்பர் அருணாசலத்துடன் வந்தார். இருவரும் பெயருக்கு ஏற்ப சிறப்பானவர்கள். இவர்கள் "தாரமங்கலம் வரலாற்று ஆய்வு அறக்கட்டளை" எனும் குழுவில் உள்ளனர். தாரமங்கலத்தைச் சுற்றி இருக்கும் வரலாற்றுச் சின்னங்கள் அனைத்தையும் அறிந்துவைத்திருக்கின்றனர்.

கோடை வெயிலையும் பொருட்படுத்தாமல் எங்களுக்குத் தாரமங்கலத்திலுள்ள காடு மேடு எனப் பல இடங்களுக்குக் கூட்டிச் சென்று நடுகற்கள், கல்வெட்டு எனப் பல வரலாற்றுச் சின்னங்களைக் காட்டினர். கிட்டத்தட்ட 80கிலோமீட்டர் பயணம். இது போன்ற பொறுமை அமைவது மிக அபூர்வம்.







அவர் எங்களை அழைத்துச் சென்று காட்டிய அனைத்தும் புகைப்படங்களாக.





குதிரைவீரன் சதிகல்

தாரமங்கலம் நடுகற்கள்

புதுப்பாளையத்தில் உள்ள முப்பீஸ்வரர் கோயிலின் முன்பாக மூன்று நவகண்ட நடுகற்களும், தூண் வடிவிலான நடுகல்லும் காணப்படுகிறது. இந்த நடுகல்லில் ஒருவர் தன் தலையைத் தானே வெட்டி/குத்தி கொள்வது போலக் குத்து வாளுடனும் மற்ற இரண்டில் கையில் வளரி போன்ற ஆயுதத்துடன் காணப்படுகின்றனர். இதன் அருகில் நாற்பட்டை வடிவிலான தூண் போன்ற அமைப்பில் குத்துக்கல் ஒன்று கல்வெட்டுடன் காணப்படுகிறது. கல்வெட்டு எழுத்துக்கள் சிதைந்த நிலையில் காணப்படுவதால் படிக்க இயலவில்லை. பொதுவாக நவகண்டம் நடுகற்கள் ஊருக்காக உயிர் தியாகம் செய்தவரின் நினைவாக அவர் குடும்பத்திற்குச் செய்யப்பட்ட உதவி போன்றவற்றை நினைவுபடுத்த வைப்பதாகும்.

தாரமங்கலம் புலிகுத்திகல்

தாரமங்கலம் தேரடிக்கு அருகில் எடப்பாடி சாலையில் காணப்படுகிறது ஒரு புலிகுத்தி கல்...

சேலம் மாவட்டம் தாரமங்கலம், எம். செட்டிபட்டியில் இருந்து செம்மாண்டபட்டி செல்லும் வழியில், ஒரு வீட்டின் அருகில் வழிபாட்டில் இருக்கிறது ஒரு குதிரைவீரனின் சதிகல்.

ஒரு வீரன் வாளேந்தி குதிரையில் அமர்ந்தும், அருகில் அவரது இரு மனைவியரும், அதில் ஒருவர் கையில் ஆயுதம் ஏந்தி இருப்பது போலவும் காணப்படுகிறது. அது மட்டுமன்றி கால்நடைகளும் காணப்படுகின்றன. அனேகமாக இக்கல் ஆநிறைக் கவர்தல் சம்பந்தப்பட்ட கல்லாக இருக்கலாம்.



புலிகுத்தி சதிகல்:

தாரமங்கலம் எம்.செட்டிபட்டியில் இருந்து செம்மாண்டபட்டி போகும் வழியில், ஒரு வீட்டின் அருகில் வழிபாட்டில் உள்ளது புலிகுத்தி சதிகல். புலியை வீரர் குத்துவது போலவும் அருகில் ஒரு பெண் மற்றும் வேட்டை நாய் இருப்பது போலவும் காணப்படுகிறது.

தாரமங்கலம் இடங்கனசாலை காடையாம்பட்டி பெருமாள் கோயில் மிகப் பழமையான கோயில். தசாவதாரக் காட்சிகள் சுதை சிற்பமாகச் சிதைந்த நிலையில் காணப்படுகிறது. கோயில் வெளிப்பிரகாரத்தில் கல்வெட்டுகள் சுண்ணாம்பு பூசி மறைக்கப்பட்ட நிலையில், இராஜகோபுரம் கட்ட ஆரம்பித்து முதல் நிலையுடன் உள்ளது. மிக உயரமான ஒரே கல்லால் ஆன விளக்கு தூண் காணப்படுகிறது. தகுந்த ஆய்வுகள் மேற்கொண்டால் மேலும் விவரங்கள் வெளிவரும்.



# யானைக் காதலன் #3

## – இரா. ஜகதீஷ்,



"கேசவன்" இந்த நான்கு எழுத்தில் துவங்கியது என் யானைக் காதல். அந்த வயதில் யானைக்குப் பெயர் இருக்கும் என்ற புரிதல் கூட இருந்திருக்குமா என்று தெரியவில்லை. ஆனால் இருந்திருக்கிறது. எனக்கு வெறும் யானை என்றும், வளர்ப்பவர்களுக்குக் கேசவன் என்றும்.இன்று நாள் முழுக்க என் ஞாபகங்களை என் நெற்றிப்பொட்டில் நிறுத்தி யோசித்துப் பார்க்கிறேன், கேசவன் எப்படி இருந்திருப்பான் என்று? யூகத்தின் அடிப்படையிலும், பொதுப் புத்தியின் அடிப்படையிலும் கேசவன் ஆண் யானையாகத்தான் இருந்திருப்பான் என்பதை நமுட்டு சிரிப்புடன் கூறிவிட முடியும். ஆனால் கேசவன் கொம்பானையா? எவ்வளவு நீளத் தந்தம் இருந்திருக்கும்?எவ்வளவு பெரிய யானையாக இருந்திருக்கும்? எங்கள் தெருவைத் தவிர்த்து வேறு எங்காவது கேசவனை பார்த்திருக்கிறேனா? ஏன் இன்று பார்த்தசாரதி கோவிலில் மீண்டும் யானை வாங்கவில்லை? கேசவனை எங்குப் புதைத்தார்கள்? என்று பல கேள்விகள் மனதைத் துளைத்துக்கொண்டே தான் இருக்கிறது.

சிறுவயதில் வல்லாரை சாப்பிட்டால் மூளை வளரும்,அதை சாப்பிட்டால், இதைச் சாப்பிட்டால் புத்தி கூர்மையாகும் என்று அம்மா சொன்ன அத்துணையும் கட்டுக்கதை போலும் என்று இன்று சுயபுத்தியோடு சிந்திக்கத் தோன்றுகிறது. இப்படி கேசவன் எங்கள் தெருக்களில் வலம் வந்த போதுதான் யானை என் மூளை என்னும் நீச்சல் குளத்தில் நீர் அருந்த வந்திருக்கும் போலும். வந்தவன் அங்கேயே தங்கிவிட்டதன் விளைவுதான் கேசவன் மறைந்து இருபது ஆண்டுகள் கடந்தும் யானை இன்னும் என்னை வழிநடத்தி கொண்டிருப்பதன் மாயம். கேசவனுக்குப் பிறகு எந்த ஒரு யானையையும் அந்த வயதிலோ அல்லது வளரும்போதோ பார்த்ததாக என் நினைவில் இல்லை.

என் நினைவிலிருந்தது எல்லாம் யானை என்ற பெயரும் அதன் உச்சி தொடும் உயரமும் தான். அதன் உருவத்தையும் அவ்வளவு எளிதில் எந்த ஒரு இந்திய இரத்தத்தாலும் கடந்துவிட முடியாது.இந்த நிலப்பரப்பு முழுதாக யானை உள்ளது. யானை முகத்தானாக தெருவுக்கு தெரு வீற்றிருக்கிறது. யானை முகத்தானை பார்த்துத் தான் இங்குப் பல காரியம் செய்வோம். ஆம் அவன் முழுமுதற்கடவுள். பலருக்கு அவன் தான் கதாநாயகன். இந்தியக் குழந்தைகள் பலருக்கு முதல் முகமூடி அணிந்த கதாநாயகன். உலகில் இன்றைய முகமுடி அணிந்த பல சாகச நாயகர்களுக்கு ஆனை முகத்தோனே காரணகர்த்தாவாக இருந்திருப்பான். பல பெண்களின் செல்ல நாயகன், தொந்தியும்,பருத்த சதையும் முகமோடு ஒரு காதலனை விரும்பும் பெண்கள் இம்மண்ணின் பெண்களாக மட்டுமே இருக்க முடியும். அந்த காதலன் ஆனைமுகத்தொனாக மட்டும் தான் இருப்பான்.

இந்திய நிலம் முழுக்க ஒவ்வொரு வீட்டிலும் யானை ஏதாவது ஒரு உருவத்தில் இருக்கும். பொம்மையாக ஓவியமாக, சிற்பமாக, கடவுளாக என்று யானை இல்லாத இடம் இங்கு மிக மிகக் குறைவு. இந்த ஈர்ப்புதான், இந்த சுவடுகள் தான் யானை என்ற பேரண்டத்தை என்றும் உங்களின் உள்ளும், இங்கு யாவரின் உள்ளும் அசைக்கமுடியாத இடத்தை நம் ஆழ் மனதில் பதிய வைத்து நமக்கு எண்ணும் போதெல்லாம் நம் கண்முன் தோன்றி நம்மை அழகு பார்க்க வைக்கிறது.

யானையைப் பற்றிப் பேசவேண்டிய அவசியம் இன்றைய சூழலில் அதிகமாகவே இருக்கிறது. காரணம் இந்திய மக்கள் தொகை நூற்று முப்பது கோடியைக் கடந்து வெற்றிகரமாக நகர்ந்துகொண்டிருக்கும் பொழுது இங்கு யானைகளின் எண்ணிக்கை வெறும் இருபத்து ஏழாயிரம் மட்டுமே. அதாவது கோடிகளைத் தாண்டி மக்கள் தொகை இருக்கும் ஒரு தேசத்தில் காட்டின் உயிர்ப்பு, நிலத்தின் மிகப்பெரிய உயிரான யானை சில ஆயிரங்களே இருப்பது என்பது இந்த

மண்ணின் மீது நிகழ்த்தப்படும் மிகப்பெரிய வன்முறை என்பதைத் தவிர வேறு என்ன சொல்ல முடியும்? யானைகள் பற்றிப் பேச , யானைகளின் அவசியத்தை உணர்த்த, யானைகளின் பாதுகாப்பை உறுதி செய்ய இதை விட வேறு காலம் கிடைக்காது.

நானும் யானையும், அவளும் நானும் என்று தொடர்பு கொள்ள அவள் தும்பிக்கையின் நீளத்தைப்போல நீண்டுகொண்டே இருக்கிறது. இதையும் கடந்து அவளும் நானும் என்று தலைப்பையும் கடந்து, யானை , அந்த முழு உருவத்தையும் சுற்றிப் பார்க்க வேண்டாமா நாம்?இனி இந்த கட்டுரையோடு யானைகளைப் பற்றிய தகவல்களையும் சேர்த்துக் காண்போம். இந்த முறை அதன் முதல் முயற்சியாக உலக மொழிகளிலே சிறந்த மொழி தமிழ் மொழி ,தொன்மொழி, செம்மொழி. உலக மொழிகளிலே எந்த மொழியும் கொடுக்காத ஒரு உயர்ந்த சித்தாந்தத்தையும் , சிந்தனைகளையும் கொடுத்த மொழி தமிழ். தமிழ் என்ற மொழி வியப்பின் ஆச்சரியக்குறி . அப்படிப்பட்ட தமிழ் யானை என்ற ஒன்றை உயிருக்கு உலகில் பல கோடிகளைத் தாண்டி உயிர்கள் இருந்தாலும் கூட யானை என்ற ஒற்றை உயிருக்குப் பல பெயர்களைச் சூட்டி கொண்டாடியும் மகிழ்ந்தும் இருக்கிறது.அப்படிப்பட்ட யானைகளின் பெயர்களைத் தொடர்ச்சியாக நம் ஹெரிடேஜர் குழுவின் "யானையின் காதலர்கள்" என்ற முகநூல் பக்கத்தின் மூலம் பகிர்ந்துகொண்டிருக்கிறேன். இந்த கட்டுரையின் மூலம் மொத்த பெயர்களையும் உங்கள் கண்முன்னே வைத்துவிடலாம் என்ற முடிவிற்கு வந்திருக்கிறேன். எல்லா பெயர்களையும் படித்து நியாபகப்படுத்திக் கொள்ளுங்கள் யானையைப் பார்க்கும் போதெல்லாம் ஒவ்வொரு பெயரை இட்டு மகிழ்ந்து பாருங்கள். உங்களுக்கு யானையின் அருமை தெரியும்! தமிழ் ஏன் யானையைக் கொண்டாடியது என்று தெரியும்! யானையின் பெயர்கள் பின்வருமாறு.

யானை பற்றிய தகவல்கள் தேடும் போது அதற்கு ஒன்று, இரண்டல்ல மொத்தம் 60 பெயர்கள் தமிழில் இருப்பது தெரிய வந்தது.என்ன ஆச்சரியமாக இருக்கா.பெயர்கள் பின்வருமாறு,

# யானை (கரியது)
# வேழம் (வெள்ளை யானை)
# களிறு
# களபம்
# மாதங்கம்
# கைம்மா (துதிக்கையுடைய விலங்கு)
# உம்பர்
# உம்பல் (உயர்ந்தது)
# அஞ்சனாவதி
# அரசுவா
# அல்லியன்
# அறுபடை
# ஆம்பல்
# ஆனை
# இபம்
# இரதி
# குஞ்சரம்
# இருள்
# தும்பு
# வல்விலங்கு
# தூங்கல்
# தோல்
# கறையடி (உரல் போன்ற பாதத்தை உடையது)
# எறும்பி
# பெருமா (பெரிய விலங்கு)
# வாரணம் (சங்கு போன்ற தலையை உடையது)
# பூட்கை (துளையுள்ள கையை உடையது)
# ஒருத்தல்
# ஓங்கல் (மலைபோன்றது)
# நாக
# பொங்கடி (பெரிய பாதத்தை உடையது)
# கும்பி
# தும்பி
# நால்வாய் (தொங்குகின்ற வாயை உடையது)
# குஞ்சரம் (திரண்டது)
# கரேணு
# உவா (திரண்டது)
# கரி (கரியது)
# கள்வன் (கரியது)
# கயம்
# சிந்துரம்
# வயமா
# புகர்முகம் (முகத்தில் புள்ளியுள்ளது)
# தந்தி
# மதாவளம்
# தந்தாவளம்
# கைம்மலை (கையை உடைய மலை போன்றது)
# வழுவை (உருண்டு திரண்டது)
# மந்தமா
# மருண்மா
# மதகயம்
# போதகம்
# விரமலி
# மதோற்கடம் (மதகயத்தின் பெயர்)
# கடகம் (யானைத்திரளின்/கூட்டத்தின் பெயர்)

ஆகியவை ஆண் யானைகளின் பெயர்கள்.

# பிடி
# அதவை
# வடவை
# கரிணி
# அத்தினி ஆகியவை பெண் யனைகளின் பெயர்கள்.

இரண்டும் சேர்ந்து மொத்தம் 60 பெயர்கள் இருக்குதாம். வாலாட்டிக் கொண்டே நிற்கிறது!! ஒரு முறை படித்து சிலாகித்து விடுங்கள் ..

(காதலனின் அன்பு தொடரும்....)